# கண்ணனின் கருணை மொழிகள்

## பகவத் கீதை எளிய உரை

விழுதுகள் செ. அய்யாப்பிள்ளை

கவிஞர்குரல் பதிப்பகம்

1. நேரு நகர், மண்ணூர் பேட்டை,
சென்னை - 600 050.
பேசி : 9551547027

# நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **கண்ணனின் கருணை மொழிகள்** |
| நூலாசிரியர் பெயர் | : | **விழுதுகள் செ. அய்யாப்பிள்ளை** |
| முதற் பதிப்பு | : | 2013 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| பொருள் | : | கட்டுரை |
| மொழி | : | தமிழ் |
| நூல் அளவு | : | 1 X 8 கிரௌன் |
| பக்கங்கள் | : | 80 |
| தாள் | : | 16 வெண் தாள் |
| ஒளி அச்சு | : | **அன்றில் ஒளி அச்சு,**<br>192, செகசீவன்ராம் சாலை,<br>சேப்பாக்கம், சென்னை - 600 005.<br>044 - 28411525 |
| அச்சிட்டோர் | : | **செம்மொழித் தமிழ் அச்சகம்**<br>சேப்பாக்கம், சென்னை - 5<br>பேசி : 9445237754 |
| வெளியிடுவோர் | : | **கவிஞர்குரல் பதிப்பகம்**<br>1. நேரு நகர், மண்ணூர் பேட்டை,<br>சென்னை - 600 050.<br>பேசி : 9551547027 |
| விலை | : | **உரு. 40/-** |

# ஏன்னுரை

வணக்கம்.

புனிதமான வேதமாகத் திகழும் அருள்மிகு பகவத் கீதையைப் படிக்கும்போது எமது இயல்புபடி குறிப்பெடுத்து பார்த்ததில் இதை புத்தகமாக்கினால் பயன் உள்ளதாக இருக்கும் எனக் கருதினோம். மூலகீதம் வடமொழி, விரிவுரை சமற்கிருத சொல்லாட்சிகளை விடுத்து விதை நார் தோல்களை நீக்கிச் சுளையாக அதுவும் இரண்டு வரிகளில் கீதை அருளப் பட்டது போலவே இரண்டு வரிகளில் உரை எழுதப்பட்டுள்ளது.

சில வசனங்களுக்கு விரிவாக உரை எழுத முடிய வில்லை என்று வருந்த வேண்டியிருக்கிறது. முதலில் இந்த உரை தனித்தமிழில் எழுதியிருந்தேன். அது புரியும்படி இல்லை என்று நண்பர்கள் கூறியதால் கொஞ்சம் மாற்றியுள்ளேன்.

‘க்ஷ’ என்ற எழுத்து ‘ழ்’ என்று எழுதியுள்ளதை அனுசரித்துப் படிக்கவும், ஆங்கிலத்தை அனுசரித்துத் தானே உச்சரிக்கிறோம்? வடமொழிப் பெயர்களைத் தமிழ் படுத்தும் இலக்கணம் எமக்கு தெரியவில்லை.

கடவுள் பேசியபடியே உச்சரிக்க வேண்டும், சமற் கிருத ஒலியலைகளில் தான் சக்தியிருக்கிறது என்பார்கள்.

மொழியால் கடவுளிடம் பேசுவதைவிட உணர்வால் பேசுவது நல்லது.

கீதைக்கு ஆதிசங்கரர், இராமானுசர், மத்வர் போன்ற ஞானிகளும், பாரதியார், கண்ணதாசன் போன்ற ஆன்மீகக்

கவிஞர்களும் மற்றும் பெரியோர்களும் உரை எழுதியிருந் தாலும் இது புதுமையானது. பொருள் மாறாதது.

எது எப்படி இருந்தாலும் கடவுள் நிலைப் பாட்டை தெளிவாகக் கூறுகிறது கீதை எமது "இந்துச் சிலைகளின் இனிய தத்துவம்" என்ற நூலில் விரிவாக இதை எழுதியுள்ளோம்.

உயிரினங்கள், மனிதன், மனிதனின் அறிவு, மனம், குணம் பற்றியும் கீதை விளக்குகிறது. இறையன்பு பெறும் பாதையை கீதை காட்டுகிறது. மனத்தை ஒருமையாக்கி எடுத்த காரியத்தை வெற்றிபெறச் செய்யும் வியூகத்தைக் கூறுகிறது. உடல் எனும் சேத்திரத்தில் மனத்துக்கும் அறிவுக்கும் நடக்கும் போர்க்களத்தில் அறிவு எவ்வாறு வெல்ல வேண்டும் என்பதை கீதை பாதை காட்டுகிறது.

போர்க்களத்தில் போர் வெறியைத் தூண்டும் வகையில் தான் தளபதி பேச வேண்டும். இங்கே நிதானம் பற்றியும் கடமைகளைப் பற்றியும் இடையிடையே சில தத்துவங்களையும் பேசுவது நமக்கு பயன்படுகிறது. மனப்போர் துவங்கட்டும் அறிவு வெல்லட்டும் புறப்படுவோம் போர்க்களம் நோக்கி வாரீர்....


## நன்றி

எமக்கு எழுதுகோலும் கொடுத்து, இருக்கை நாற்காலியும் கொடுத்து எழுதவைத்து தன் சொந்தச் செலவில் புத்தகமாக்கிய பி.ஆர்.எஸ். பள்ளியின் தாளாளர் திருமிகு எம். இராமதாசு அய்யா அவர்களுக்கும், விழுதுகள் தொண்டு நிறுவனத் தோழர்களுக்கும், பொறுமை யாக ஒளிஅச்சு செய்த அன்றில் பதிப்பகத்திற்கும், கண்ணன் கருணை புரிவானாக!

- விழுதுகள் செ. அய்யாப்பிள்ளை

# அதிகாரம் - 1

## [போர்க் களக்காட்சிகள்]

1.1 தர்ம சேத்திரத்தில் என்ன நடக்கிறது என்பதை சஞ்சயன் மூலம் திருதராட்டிரன் கேட்டுத் தெரிந்து கொள்கிறான்.



1.2 சஞ்சயன்: மாமன்னா! பாண்டவர்கள் அணிவகுப்பைப் பார்வையிட்டு துரியோதனன் ஆச்சாரியரிடம் கூறுகிறான் :



1.3 "உங்கள் புத்திசாலி சீடன் துருபதனின் மகன் அணி வகுத்த பாண்டவர் படையைப் பார்த்தீர்களா?



1.4 அவர்கள் படையில் அர்ச்சுனன், பீமனுக்கு இணையான யுயுதானன் விராடன், துருபதன் போன்றோர் உள்ளனர்.



1.5 மேலும் திரு'ழ்'ட கேது, சேகி தானன், காசிராசன், புருசித், குந்திபோசன், சைப்யன் :



1.6 மற்றும் யுதாமன்யு, உத்தமௌசா, சுபத்திரை துரோபதி புத்திரர்கள் மற்றும் மாபெரும் இரத வீரர்களாக உள்ளனர்.



1.7 
"ஆச்சாரியாரே! தம் படையைப் பற்றியும் தெரிந்து கொள்ளுங்கள் அப்போது தான் நமது படையை நல்வழி நடத்த முடியும்". - துர்யோதனன்.

1.8 
நமது படையில் தாங்கள், பீ'ழ்'மர், கர்ணன், கிருபாச்சாரி, அசுவத்தாமன், விகர்ணன், பூரி'ழ்'வரன் மற்றும்;

1.9 
எனக்காக உயிரையும் கொடுக்க உருவிய வாளோடு அணிவகுத்து நிற்கும் அழகைப் பாருங்கள்!

1.10 
பாட்டன் பீ'ழ்'மரின் பலமிக்கப்படை பெருகிய படை! பீமனின் படையோ குறுகிய படையாக இருக்கிறது!

1.11 
வீரர்களே! போர்முனையில் எங்கிருந்தாலும் பீழ்மருக்கு முழு பாதுகாப்பாக இருங்கள்!

1.12 
அப்போது குருவம்ச வீராதி வீரர் பீ'ழ்'மர், துரியோதனன் மகிழ்வதற்காகத் தன் சங்கை எடுத்து ஊதினார்.

1.13 
துரியோதனன் படைகள் சங்கு, மத்தளம், முரசு, கொம்பு, தாரைகளை முழங்கி ஒலி எழுப்பினர்.

1.14 
எதிரே வெண்புரவி பூட்டிய வியப்பான தேரில் கண்ணனும், காண்டீபனும் அமர்ந்துள்ளனர்.

1.15 
கண்ணன் 'பாஞ்ச சன்யம்' எனும் சங்கினாலும் அர்சுணன் 'தேவதத்த சங்காலும்' பீமன் 'பௌன்ட்ரம்' எனும் சங்கினாலும் சங்க நாதம் முழங்கினர்.

1.16 

மன்னர் யுதி'ழ்'டிரர் அனந்த விஜயம் சங்கினாலும் நகுலன் சகாதேவன் சுகோசம் மணி பு'ழ்'பகம்,

1.17 

காசி ராசன் சிகண்டி திருதக்கன் விராடன் சாத்யகி, துருப்தன் பாண்டவர்களின் பிள்ளைகள் தம் சங்கு களால் எதிரிகள் நடுங்க சங்க நாதம் முழங்கினர்.

1.18 

இவர்களின் சங்கநாதத்தால் சிங்கமாக இருந்தவர்கள் முகம் சிறுநரியாக பயந்து போய் உள்ளது.

1.19 

அனுமன் கொடி பறக்க அர்சுனன் தேர் கம்பீரமாக நிற்கிறது. தன் எதிரிகளைப் பார்க்கிறான்!

1.20 

அண்ணலே அடலேறே கண்ணா! என்னுடைய எதிரிகளை இறுதியாக ஒருமுறை பார்க்கிறேன் படைகளுக்கிடையே தேரை நிறுத்துங்கள்.

1.21 

எவ்வளவு நேரம் ஆனாலும் பரவாயில்லை! எவ்வளவு தைரியத்துடன் என்னுடன் போரிட்டுச் சாவதை

1.22 

அறிந்தும் அநீதிக்கு துணை போக வந்த அந்நிய நாட்டு மன்னர்களை என் கண்ணால் பார்க்க வேண்டும்!

1.23 

இரு படைகளுக்கும் இடையே அந்த இடையன் சீறிச் சென்ற தன் தேரை சிக்கென நிறுத்துகிறார்.

1.24 

"பார்த்தனே பார்! குருவம்சத்தின் தேர் அதில் குந்தியுள்ளவர்களைப் பார்! பீ'ழ்'மர், துரோணர்"

1.25 அங்கே தந்தையர், பாட்டனார், ஆச்சாரியர், மாமன், சகோதரர்கள் மகனைப் போன்றோர், உற்றார் உறவினர் மாமன்னர்கள், மாமனார்;

1.26 இறக்கப்போகும் இவர்களை இனி எந்தப் பிறவியில் எப்போ பார்க்கப் போகிறோம். இது என்னா கொடுமை?

1.27 போர்த் தொடுக்க வந்திருக்கும் கேளிர், கிளைஞர் களைக் கண்டு மெய்யும் வாயும் காய்ந்தது.

1.28 கை நடுங்குவதால் என் காண்டீபம் நழுவுகிறது. மெய் நடுங்குவதால் மேனி சிலிர்க்கிறது!

1.29 கேசியைக் கொன்ற கேசவா என் மனம் கூசுகிறது! என் பாச மனதில் புயல் வீசுகிறது!

1.30 போரிலே நம் கேண்மையாளர்களைக் கொன்று மேண்மை யாளராக வேண்டுமா? நிலைமையே சரியில்லையே!

1.31 கோவிந்தா! நான் போர் வேந்தனாகவோ கோ வேந்தனாகவோ சுகவேந்தனாகவோ விரும்பவில்லை, இவைகளால் என்ன பயன்?

1.32 வெற்றி இல்லையேல் வீரமரணம் என்று கங்கனம் கட்டி களத்தில் இறங்கியுள்ளனரே?

1.33 உற்றார், உறவினர், பெற்றோர், ஆசிரியர் நண்பர்கள், குருமார்கள் எதிரே இருக்கிறார்கள்.

1.34 மூவுலகை தந்தாலும் கொல்லமாட்டேன்! இந்த பூவுலகத்திற்கா இவர்களை கொல்வேன்?

1.35

இவர்களைக் கொல்வதால் பாவம் தான் வருமே தவிர எவ்வித லாபமும் வரப் போவதில்லை!

1.36

ஏந்தலே! எதிரிகளை கொல்வது தான் சத்திரிய தர்மம்! ஆனால் எதிரே இருப்பவர்கள்?

1.37

போர்க்கொடுமைகளை தன் பேராசையால் இவர்கள் அறியவில்லை! நாமும் அப்படியா?

1.38

குலத்தலைவர்கள் அழிவதால் குல தர்மம் அழியும், குல தர்மம் அழிவதால் குல அதர்மம் எழும்!

1.39

அதர்மம் தலையெடுத்தால் இல்லறம் சீரழியும், இல்லறச் சீரழிவால் பெண்கள் சோரம் போவார்கள்.

1.40

நரகம் நிரம்பும் நற்செயல்கள் குறையும், இறந்தவர்களுக்கு பிண்டமும், நீரும், பூசையும் போய் விடும்.

1.41.

நீதிக்கட்டுப்பாடு குலக்கடமைகள், குல தர்மங்கள், சாதிக் கட்டுப்பாடு அழியும்!

1.42

இப்படி தர்மத்தை கொன்று அதர்மத்தில் வீழ்ந்தவர்கள் நரகத்தில் வீழ்ந்து மடிவர் தானே!

1.43

அறிவிருந்தும் அதர்மத்தைச் செய்யலாமா தெளிவிருந்தும் சேதத்தை விரும்பலாமா?

1.44

ஆயுதத்தை போட்டு விட்டு நிற்கின்றேன்! என்னை அம்பு விட்டு கொன்றாலும் மகிழ்கின்றேன்!

1.45

வில்லை வீசி விட்டு, தேர்த்தட்டின் பின்புறம் மார்தட்டி வந்த மாவீரன் கைகட்டி அமர்ந்து விட்டான்! மன்னவா!

# அதிகாரம் - 2

## ஆதன் விளக்கம் [ ஸாங்கிய யோகம் ]

1/2 அர்ச்சுணன் இரக்கத்தினால் கண்ணீர் மல்க நிற்பதைக் கண்டு கண்ணன் கூறுகிறார்.

2/2 "மோசமான இந்த நேரத்தில் உனக்கு எங்கிருந்து இந்த நேசமான உணர்வு பற்றுபாசம் வந்தது?

3/2 இழிவான எண்ணத்தை விடு! இது உன் தகுதிக்கு கேடு! பலவீனத்தை விடு! படையை எடு!"

4/2 மதுசூதனா! என் வணக்கத்திற்குரிய பீ'ழ்'மர் துரோணர் இவர்களை எப்படி எதிர்ப்பேன்!"

5/2 பெரியோர்களை அழித்து நாம் பெருகின்ற வரலாறு இரத்தத்தால் எழுதப்படுமே! இது தேவையா?

6/2 அவர்களைக் கொல்வதா? அவர்கள் நம்மைக் கொல்வதா? என் முன் நிற்பவர்கள் எனது இளவல்கள் அல்லவா?

7/2 தருமம் எது? அதருமம் எது?நான் குழம்பி நிற்கிறேன் குருவே! என் குழப்பத்தை தீர்ப்பீராக!

8/2 சொர்ணபுரியான சொர்கத்தையே என்னிடம் தந்தாலும் இந்தச் சோகத்தை மறக்க முடியாதே!

09/2 அரச்சுணன், "நான் போரிட மாட்டேன்" என்று கூறுவதை சஞ்சையன் விளக்குகிறான்

10/2 மண்ணினை மீட்டிடும் மாபெரும் போர்க்களத்தில் **கண்ணனின் கருணை மொழிகள்** இதோ:

11/2 கருணையுடன் பேசுகிறாய்! கவலைப்படுகிறாய்! இறப்பு, பிறப்பு கவலை வீரர்களுக்கு வேண்டுவதில்லை.

12/2 நாம் அனைவரும் இருந்திருக்கிறோம், இருக்கிறோம், இனி ஒரு பிறவியாக இருக்கப் போகிறோம்.

13/2 சிறு வயது, இளவயது, முதுமை, வருவது போல் ஆதன் (ஆத்மா) உடல் விட்டு உடல் மாறும் -

14/2 தட்பவெப்பமும், இன்பதுன்பமும், நிரந்தரமான வையல்ல அதைப் பொருத்துக் கொள்!

15/2 இன்ப துன்பங்களை சமமாகப் பார்ப்பவன் வந்து போகும் மரணத்தையும் சமமாகப் பார்க்கிறான்.

16/2 இல்லை என்பதில் இருக்கிறது! (அறிவு - அருவம்) இருக்கிறது என்பதில் இல்லை! (காட்சிகள் - உருவம்)

17/2 அழிவற்றதையும் (அருவம்) அழிவுடையதையும் (உருவம்) அறிந்து கொள்! அறிவு அழியாதது.

18/2 அழியக் கூடிய உடலை (அறிவு அறம் அன்பு புகழ் இவை அழியக் கூடியதல்ல) அழிக்க போர் புரிக!

19/2 கொல்பவன், கொல்லப்படுபவன் என்பதெல்லாம் ஆதனுக்கு (ஆத்மா) இல்லை அது மனிதனுக்கே!

20/2 ஆதன் இறப்பு பிறப்பு இல்லாதவன், சீவன் இறப்பு பிறப்பு உடையவன். ஆதனைக் கொல்லமுடியாது.

21/2 அழிக்க முடியாதது ஆதன் என்பதை அறிந்தவன் அழிக்க முனைவது எதை? (உடலையே!)

22/2 உடையை மாற்றுவது போல் ஆதன் (ஆத்மா) உடலை மாற்றுகிறான்.

23/2 ஆதனை வெட்டவோ எரிக்கவோ கரைக்கவோ காயவைக்கவோ முடியாது (அது அருவம்)

24/2 பஞ்ச பூதங்களாலும் தாக்கமுடியாத எங்கும் நிறைந்தவன் என்றும் நிரந்தரன் ஆதன் மட்டுமே!

25/2 உருவமற்றவன், உள்ளத்தைக் கடந்தவன், மாறுதல் இல்லாத அந்த மாதவனை அறிந்து ஆறுதல் பெறு!

26/2 அப்படியே பிறப்பு. இறப்பு மீண்டும் பிறப்பு என்றாலும் நீ வருந்துவது பெருந்தவறு.

27/2 அர்சுனா! இறப்பும் பிறப்பும் இயற்கை! இதற்கு ஏன் வருகிறது உனக்கு மயக்கை?

28/2 பிறக்கும் முன்போ இறந்த பின்போ காணமுடியாத வடிவங்களைப் பார்த்து ஏன் கலங்குகிறாய்!

29/2 ஆதனை பார்ப்பவர்களும், பேசுபவர்களும் கேட்பவர்களும் மிக அரிதானவர்களே!

30/2 உடலில் உள்ள ஆதனை கொல்ல முடியாது, ஆனால் உடல் அழிவதைத் தடுக்க முடியாது!

31/2 அறத்தைக் காக்க போரிடும் உரிமையும், கடமையும் ஒரு அரசனுக்குத் தரப்பட்டிருக்கிறது.

32/2 மனித உரிமைக்குப் போராடும் மறவர்களைப் புனித சுவர்க்கம் பூரிப்புடன் வரவேற்கும்.

33/2 தர்மத்தைக் காக்க நீ தவறினால் தர்மம் உன்னை காக்கத் தவறி விடும்!

34/2 மாவீரன் மண்டியிடுவதை விட, மானம் காக்க மாண்டு விடுவது மேல்!

35/2 மாவீரர்கள் உன்னைப்பார்த்து சிரிக்க வேண்டுமா? மாவீரன் இவனா என்று நகைக்க வேண்டுமா?

36/2 இழிவாக உன்னைப் பேச வேண்டுமா? மிக இழிவாக உன்னை ஏச வேண்டுமா?

37/2 எதிரியால் அழிக்கப்பட்டால் சுவனம் கிட்டும்! எதிரியை நீ அழித்தால் புவனம் கிட்டும்!

38/2 இன்ப துன்பம், நன்மை தீமை, வெற்றி தோல்வி, இவைகளை பார்க்காமல் போருக்கு புறப்படு!

39/2 கர்ம வீரனே! கடமையை அறிந்து பலனைப் பார்க்காமல் பணி செய்ய எழுவாய் அருச்சுனா!

40/2 'என் கடன் பணி செய்து கிடப்பதே' சிறிதளவு இதை அறிந்தாலே பெரிதளவு பயம் அகலும்.

41/2 கொள்கையுள்ளவர் மனம் உறுதிபடச் செய்யும்! கொள்கையில்லாதவர் மனம் தடுமாறச் செய்யும்!

42/2 நற்கதி, நற்பதவி, நற்பிறவி, என்பார்கள். நறுமணச் சொற்களால் அறிவிலிகள் பிர்மமே மேலானது.

43/2 சிற்றின்பமும், செல்வமும் தான் சிறந்த வாழ்க்கை என்ற சிந்தையாளர்கள் சிற்றறிவுடையவர்கள்.

44/2 சிற்றின்பத்திற்கும், செல்வத்திற்கும் மயங்குப்வர்கள் பேரின்பத்திற்கு உதவும் பேரறிவு பெறுவதில்லை!

45/2 முக்குணங்களின் மூலக்கொள்கை செல்வம் சேர்ப்பது, அதை காப்பது என்ற வேசத்தை விடு!

46/2 பிருமம் எனும் பெரிய கடலைக் கடந்தவனுக்கு சிறு தெய்வம், சிறிய குளம் குட்டை போன்றது.

47/2 கடமையைச் செய்! பற்றை எதிர்பாராதே! கடமையைச் செய்! பலனை எதிர்பாராதே.

48/2 வெற்றி தோல்விகளை சமமாகப் பார்! அதுவே சமநிலை மனப்பயிற்சியாகும்.

49/2 கொஞ்சமும் பலன் பாராமல் சமநிலை மனதுடன் எம்மை சரணடைந்து விடு!

50/2 சமதருமன் பாவபுண்ணியங்களை விடுவான்! இரு வினைகளில் இருந்தும் விடுபடுவான்.

51/2 தொண்டின் பயனை இறைவனுக்கே தந்தவர்கள் ஆண்டவன் அருளை அனு தினமும் பெற்றிடுவர்.

52/2 மோக நிலையை விட்டு யோக நிலைக்கு வந்து விட்டால் வானளவாகிய புகழ் கிட்டும்!

53/2 எப்பொருளை யார் யார் சொன்னாலும் அப்பொருளின், மெய்ப்பொருள் அறிக! உண்மை உணர்க!

54/2 ஓர் இறைக்கொள்கையாளன் எப்படிப்பேசுவான் எப்படி இருப்பான் அவன் இயல்புகள் என்ன?

55/2 புலனின்பங்களைத் துறந்து ஓர் இறைக் கொள்கையில் உறுதியுடன் இருப்பான்.

56/2 அவன் இன்பம், துன்பம், ஆசை, பயம், கோபத்தையும் அறவே விடுத்தவனாக இருப்பான்.

57/2 நன்மை தீமைகளுக்கு மயங்காமலும் புகழுக்கும் இகழுக்கும் மயங்காமலும், இருப்பான்.

58/2 ஆமை போல் ஐம்புலன்களையும் அடக்கத் தெரிந்தவனாக இருப்பான்.

59/2 தேவைகளை குறைத்து விட்டாலும் பற்று இருக்கும் பற்றையும் துறந்தவன் முற்றும் துறந்த முனிவன்.

60/2 புலன்கள் பலவான்களின் மனதையும் எளிதில் கலங்கச் செய்து விடுகிறது!

61/2 புலனை அடக்கும் பயிற்சி எடுக்க, தியானம் தான் உறுதியானது, சஞ்சல மற்றது.

62/2 உலகியல் பொருட்கள் மீது பற்று வரும், பிறகு ஆசை வரும், ஆசை நிறைவேராத போது கோபம் வரும்!

63/2 கோபம் குடியைக் கெடுக்கும், ஆத்திரம் அறிவைக் கெடுக்கும், அறிவுதான் அனைத்தையும் கொடுக்கும்.

64/2 மனக்கட்டுப்பாடு உடையவன் உள்ளக்கட்டுப்பாடு பெறுகிறான். இறைவன் கோட்பாடு பெறுகிறான்.

65/2 உள்ளத்தை வென்றவர்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் விழுவர்! மற்றவர்கள் படுபள்ளத்தில் விழுவர்.

66/2 ஆனந்தம் பெற அமைதி தேவை! அமைதி பெற ஆண்டவன் அனுக்கிரகம் தேவை!

67/2 ஆசையெனும் கடுங்காற்று அறிவு எனும் படகை அடித்துச் சென்றுவிடும்.

68/2 புலன்களை வென்றவனே புத்திமான்! பொருளாசை விட்டவன் சக்திமான்!

69/2 போகிகளுக்கு பகல்பொழுது யோகிகளுக்கு இரவு. போகிகளுக்கு இரவு பொழுது யோகிகளுக்கு பகல்.

70/2 யோகிக்கு அமைதியுண்டு, (நதிமோதி கடல் பாதிக்காது) போகிக்கு அமைதியில்லை!

71/2 ஆணவம் இல்லாதவன், அகங்காரம் இல்லாதவன், ஆசையில்லாதவன் அமைதி பெறுகிறான்.

72/2 இவர்களே ஆன்மீக வாதிகள் இவர்கள் 'நிர்மலம்' என்ற பிறவியில்லா துறவியாகின்றனர்.



# அதிகாரம் - 3

## ஆள்வினை விளக்கம் [கர்ம யோகம்]

3/1. கேசவா! கர்மக் கடமைகளைவிட ஞானம் பெரிதென்றால் என்னை ஏன் கடமையைச் செய் என்கிறாய்?

3/2. மேன்மை பெறச் செய்வது கடமையா? ஞானமா? என்ற அய்யத்தைத் தீர்த்து வைப்பாயாக!

3/3. ஞான வழி ஆன்ம நேய அறிவை கொடுக்கும்! கடமை வழி சமத்துவ அறிவைக் கொடுக்கும்!

3/4. கடமை புரிந்தவன் கர்ம யோகியாகிறான்! கடமை மறந்தவன் காரியவாதியாகிறான்.

3/5. முக்குணங்களின் மூல காரணங்களால் மனிதன் விக்னங்களில் (அவஸ) வீழ்ந்து அலைகிறான்.

3/6. மனதை கட்டுப்படுத்தாமல் புலனை கட்டுப்படுத்துவது போல் நடிப்பவர்கள் போலிகள்

3/7. மனக்கயிறால் புலன்களை இறுக்குபவன் ஞானக் கடலாய் உலகில் இருப்பான்.

3/8. நெறிகளைக் கடைப்பிடிக்க செயல் புரிய வேண்டும்! நெறிகளைக் கடைப்பிடியார் மரணிக்க வேண்டும்!

3/9. உலக பற்றற்று கடமையைச் செய் (கர்மா) கடவுள் பற்றோடு கடமையைச் செய்!

3/10 வேள்விகள் நடத்தி வேண்டியதைப் பெற்று பல்கிப் பெருகி வாழ்க! இது வேத வாழ்த்து!

3/11. வேள்விகள் தேவதைகளை மகிழ்விக்கும்! தேவதைகள் உங்களை மகிழ்விக்கும்! மேன்மைகிட்டும்.

3/12 தேவன் தந்த பணத்தில் தேவை போக மீதியை தேவனுக்கே அர்ப்பணம் செய்யாதவன் திருடன்!

3/13 யாக உணவு பாவத்தை நீக்கும்! போக உணவு பாவத்தைச் சேர்க்கும்!

3/14 உயிர்களுக்கு உணவு வேண்டும், உணவுக்கு மழை வேண்டும், மழை உண்டாக வேள்வி வேண்டும்!

3/15. வேள்விக்கு விதிமுறை வேண்டும், விதிமுறைக்கு வேதம் வேண்டும், வேதத்திற்கு நான் வேண்டும்.

3/16. இந்த நியதிகளை அறியாமல் புலன்களின் போக்கை புரிந்து கொள்ளாதவன் புத்திமான் அல்ல!

3/17. நுண்ணறிவால் இன்பம் அமைதி மகிழ்ச்சியை கண்டறிந்தவனுக்கு கடமை ஒன்று மில்லை!

3/18. இந்த அறிவு நிலையில் வாழ்பவர்களுக்கு நன்மை தீமையில்லை சொந்த பந்தம் தேவையில்லை!

3/19. பற்று இல்லாத இறைவன் மீது மட்டும் பற்று கொண்டிருக்க வேண்டும்.

3/20. சீதையின் தந்தை சனகர், இராசரிசியாக இருந்தார் அவரைப் பின் பற்ற வேண்டும்.

3/21. மன்னவன் எவ்வழியோ மக்களும் அவ்வழியே! உயர்ந்தோர் எவ்வழியோ உலகோரும் அவ்வழியே!

3/22. எதையும் வேண்டி நான் கடமை செய்யவில்லை, எதுவும் எனக்கு வேண்டுவன இல்லை.

3/23. நியதிகளை நான் நிறைவேற்றத்தவறினால் மனிதன் நியதிகளை நிறைவேற்றத் தவறுவான்!

3/24. மனித குலம் சீரழியும், உயிரினங்கள் சீரழியும் அதற்கு நான் காரணமாவேன்!

3/25 பற்றற்றவர்களும் உலகத்திற்கு வழி காட்ட பற்று காட்ட வேண்டும், பற்றை விடுவதற்கு!

3/26 பலன் கருதி செயல் படுவோரை (ஊழல்) பலன் கருதி செயல் படாதிருக்கச் செய்ய வேண்டும்!

3/27 நான் எனது என்ற அகந்தை முக்குணங்களில் ஒன்று! அவன் தன்னையே கடவுள் என்பான்.

3/28 குணங்கள் காட்டும் தீயகுணங்கள் விபரங்களை அறிந்தவன், புலனின்பத்திற்கு அடிமையாகாதவன்.

3/29 புலன் இன்ப மயக்கத்தில் இருப்பவர்கள் செய்யும் தவறை நலமாகப் பேசி தடுக்க வேண்டும்.

3/30 பலா பலன், உரிமையுணர்ச்சி மனத்தளர்ச்சி எல்லாமும் கண்ணனுக்கே தந்து போர் தொடு!

3/31 கடவுளை நம்பி, அவன் கட்டளைகளை நம்பி, கடமையாற்றுபவர்கள் வெற்றி பெறுகிறார்கள்.

3/32 எம்முடைய அறத்தை நம்பாதவர்கள் பயன்படா மரத்தைப் போல் சீரழிவார்கள்.

3/33 மனிதர்களும், ஞானிகளும், மற்ற உயிர்களும் தங்கள் இயல்பு படியே தான் நடப்பார்கள்.

3/34 புலன்கள் இன்பம், துன்பம் இரண்டையும் தரும்! அதில் நலம் தருவதை நன்கறிந்தால் நன்மை தரும்!

3/35 அவரவர்கள் கடமையை உயிர் கொடுத்தும் செய்க! பிறர் கடமையில் தலையிடப் பிரச்சினைகள் எழும்!

3/36 கண்ணா! பாவம் செய்ய பயந்தாலும் அவனைப் பலவந்தமாக பாவம் செய்ய தூண்டுவது யார்?

3/37 "போதும் எனும் மனம் இல்லாத போக்கால் வரும் காம குரோத பேராசைகள் தான் அவை" அர்சுனா?

3/38 நெருப்புக்குள் புகையும், புகைக்குள் கண்ணாடியும், கருப்பைக்குள் கருவும் போல் காமத்தில் உலகம்.

3/39 போதும் எனும் மனம் இல்லாத காமநெருப்பு மேதைகளின் அறிவையும் எரித்துவிடும்.

3/40 உயிர்களை புலன், மனம், புத்தி எனும் போதைக் கயிறுகளால் கட்டப்பட்டுள்ளது.

3/41 மெய்ஞானத்தையும் விஞ்ஞானத்தையும் அழிக்கும் அந்த ஆசை எனும் அஞ்ஞானத்தைக் கொன்றுவிடு.

3/42 உடலினும் புலன்கள் மேல்; புலனிலும் மனம் மேல்; மனதினும் அறிவு மேல்; அறிவினும் ஆதன் மேல்!

3/43 அதன் துணையால் அறிவு; அறிவின் துணையால் மனம்; மனதின் துணையால் புலனாசையை ஒழி!



# அதிகாரம் - 4

## அறிவு, ஆற்றல், துறவற விளக்கம்
## [ ஞான கர்ம சந்நியாச யோகம் ]

4/1. "வேதத்தை கதிரவனுக்கு கற்பித்தேன் அவன் மனுவுக்கும், மனு இச்சவாகுக்கும் கற்பித்தான்

4/2. வாழையடி வாழையாக இராசகுருக்கள் காத்து வந்தது இந்த மறை! மறைவாகவே இருக்கிறது.

4/3. நீ என் நண்பனாக, பக்தனாக இருப்பதால் அந்த மறைப் பொருளைச் சொல்கிறேன்" - கண்ணன்.

4/4. கல்ப காலத்தில் தோன்றிய கதிரவனுக்கு அல்ப காலத்தில் தோன்றிய தாங்கள் எப்படி கற்பிக்க முடியும்?

4/5. கண்ணன்: யாம் பல பிறவிகளை எடுத்துள்ளதை அறிவேன்! நீ யோ அதை அறிய வாய்ப்பில்லை!

4/6. யான் விரும்பியபடி பிறவியெடுப்பேன் எடுக்காமலும் இருப்பேன்! பிறப்பு இறப்புக்கு அப்பாற்பட்டவன்!

4/7. எப்பொழுதெல்லாம் அதர்மம் அதிகரிக்கின்றதோ அப்பொழுதெல்லாம் அதை அழிக்கத் தோன்றுவேன்!

4/8. யுகம் யுகமாக சாதுக்களை காக்கவும் பாவத்தைப் போக்கவும் தர்மத்தைக் காக்கவும் தோன்றுகிறேன்.

4/9. எம்பிறப்பையும், செயலையும், புரிந்தவர்கள் பூமண்டலப்பிறவி விட்டு பரமண்டலப் பதவி பெறுவர்.

4/10 எம்மிடம் சரணாகதியடைந்தவர்கள் பரிசுத்தமாகி எம்மைப் போல் இயல்புகளைப் பெறுகிறார்கள்.

4/11. எம்மை எவ்விதமாக வழிபட்டாலும், எப்பெயர் இட்டு அழைத்தாலும் அவ்விதமே அணுகுகிறேன்.

4/12 தேவதைகள் உடனே தேவைகளைத் தருவதால் தேவதைகளை விரும்பி வழிபடுவார்கள் மக்கள்.

4/13 வேதியர், வேந்தர், வியாபாரி, வேளாண் என்று படைத்தோம்! மனதையாம் படைக்கவில்லை!

4/14 சொத்து, சுக, ஆசை எமக்கில்லை! இந்தத் தத்துவ மறிந்தால் துன்பம் உமக்கில்லை.

4/15 வீடு பேறு அடைய விரும்பிய மூதாதையர் வழியில் பீடு நடை போடு! பிறவித் துயரை விடு!

4/16 எப்பொருளை யார் யார் வாய் மூலம் கேட்டாலும் அப்பொருளின் நன்மை தீமை பார்ப்பதே அறிவு.

4/17. நற்செயல், தீச்யெல், செயலிழத்தல் (கர்மம், விகர்மம்) என்ற அழகான கருத்துகளை அறிவாயாக!

4/18 நற்செயல் தீச்செயல் செயலிழத்தல் கர்மம், விகர்மம் ஆகியவை பற்றி நன்கறிந்தவனே ஞானம் பெற்றவன்.

4/19. வேதங்கள் விலக்கிய வீண் செயல்களை 'அறிவு' எனும் நெருப்பால் அழித்து விட வேண்டும்.

4/20. துறவிகள் தீமையைச் செய்வதில்லை. ஆகையால் அவர்கள் நன்மையைச் செய்ய வேண்டியதில்லை!

4/21. ஒரு துறவி, உடல் வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே எனச் செயல் புரிவது தவறில்லை.

4/22. கிடைப்பதை ஏற்றுக் கொண்டும் இன்ப துன்பம் வெற்றி தோல்விகளை சமமாகப் பார்க்க வேண்டும்.

4/23. இறைவனுக்கான நல்வினைகள் மட்டுமே செய்யும் துறவிக்கு தீவினை எதுவும் தீண்டாது.

4/24. வேள்வியில் நெய், கரண்டி, திரவியம், தீ வேள்விப் பொருள் அனைத்துக்கும் மூலம் பிருமமே!

4/25. சில யோகிகள் தேவ பூசைகள் செய்கிறார்கள் சிலயோகிகள் ஆத்ம பூசைகள் செய்கிறார்கள்.

4/26. அடக்கம் எனும் அக்கினியில் புலனின்பத்தையும் புலன் எனும் தீயில் பொருளாசையையும் எரிப்பாய்.

4/27. சிலர் புலனின்பங்களை "சிந்தனை நிறுத்தம்" என்ற பயிற்சியால் எரிக்கின்றனர்.

4/28. யாகங்களாலும் கல்வியாலும் கேள்வி யாலும் யோகங்களாலும் ஞான ஒளிபெறுகிறார்கள்.

4/29 மூச்சு பயிற்சி, மூலமும் உணவுக்கட்டுப்பாடு மூலம் மனக்கட்டுப்பாட்டை பெறலாம்.

4/30 மூச்சுப் பயிற்சியின் மூலம் சிந்தனை ஓட்டத்தை தடுக்கக் கற்றவர்கள் அறிவு வளர்ச்சி பெற்றவர்கள்.

4/31. மனதைக் கடைந்து அமுதெடுக்கும் கலை அறியாதவர் மண்ணிலும், விண்ணிலும் வீண்!

4/32 வேதங்களில் நிறைய வழிகள் இருப்பதை அறிந்து வேதங்களை புரிந்து நடந்து கொள்!

4/33 பொருள் செலவழித்துக் செய்யும் யாகத்திலும் ஞானம் செலவழித்துச் செய்யும் தியாகம் மேலானது.

4/34 ஞானிகளுக்கு பணிவிடை செய்து பரமாத்மாவின் தத்துவ உண்மைகளை அறிய வேண்டும்!

4/35 அனைத்தையும் அறிந்தால் அறியாமை போய் விடும், அனைத்தும் இறை மயம் என்பது தெரியும.

4/36 நீ மகா பாவியாக இருக்கிறயா? ஞானம் பெறு! பாவக் கடலை கடந்து புனித மாவாய்!

4/37 ஞானம் எனும் நெருப்பு தீவினை, பாவங்களை தீயாக எரித்து விடும்.

4/38 மனதை பரிசுத்தப்படுத்துவது ஞானம்! ஞானத்துடன் கடமையாற்றுபவன் ஆதனுடன் ஐக்கிய மாகிறான்.

4/39 புலன்களை அடக்கக்கற்று ஞானம் அடைந்தவன் உடனேயே பேரின்பம் அடைகிறான்.

4/40 வேதத்தில் நம்பிக்கையில்லாதவனுக்கு இக பரலோகத்தில் இடமும் சுகமும் கிடைக்காது.

4/41 எம்மிடம் தன்னையே தந்து விட்டு, அறிவால் சந்தேகத்தை நீக்கு! தீவினையைப் போக்கு!

4/42 நுண்ணறிவால் ஐயங்களை அழித்து விட்டு சமத்துவப் பயிற்சி எனும் கவசத்துடன் போர் செய்!

# அதிகாரம் - 5

## பக்திமார்க்கமும் ஞான மார்க்கமும் [கர்மசந்நியாச யோகம்]

5/1. “இல்லறத் துறவி, இல்லறம், இவையிரண்டில் எமக்கு மேன்மை தருவது எது?” - அர்ச்சுனன்.

5/2. இரண்டுமே சரி என்றாலும் பக்தி திகழும் இல்லறம் எல்லோருக்கும் எளிமையானது.

5/3. விருப்பு வெறுப்பற்றவன் துறவி (சந்நியாசி) அவன் பந்தங்களில் இருந்து விடுதலை பெறுகிறான்.

5/4. பக்திமார்க்கம் ஞானமார்க்கம் இரண்டும் நன்றே பண்டிதர்கள் விரும்புது இதில் எதையாவது ஒன்றே.

5/5. பக்தி மார்க்கமும் ஞான மார்க்கமும் சமம் என்று உணர்ந்தவன் உண்மையை உணர்ந்தவன்.

5/6. இல்லறம் காணாமல் துறவியானது கடினம், இல்லறம் பக்தியில் இறைவனைக் காணலாம்.

5/7. மனம், புலன்களை அடக்கிய தூய கருணையாளன் கடமைகளை சுயநல மில்லாமல் செய்வான்.

5/8. தத்துவம் அறிந்தவன், பார்த்தல், கேட்டல் தொடுதல் நுகர்தல், உண்ணுதல், உறங்குதல் சுவாசித்தல்;

5/9. போன்றவை புலன்களால் நடக்கின்றன. அவைகளில் ஒன்றும் உண்மையில் அறிவால் நடப்பதில்லை.

5/10 கடமையைச் செய்து அதன் பலன்களை கடவுளுக்கு காணிக்கை செய்பவனை பாவம் ஒட்டுவதில்லை.

5/11. மனம் தூய்மை அடைவதற்காகவும் தூயவர்கள் மனம், அறிவு புலன்களால் பூசை செய்கிறார்கள்.

5/12 நற்செயல்களின் பலனை இறைவனுக்கு தந்து விடு. தீச்செயல்களின் பலனை சைத்தானுக்கு தந்து விடு.

5/13 மனதை வென்று ஞானத்தில் நின்றவன், ஒன்பது கதவு உடலை வென்றவன்.

5/14. உடலில் உயிர் எவ்வித செயல்களையும் செய்வதில்லை மனதின்படி செயல்படுகிறது.

5/15. ஆதம் பாவ புண்ணியங்களை ஏற்பதில்லை அறிவு மூடப் படுவதால் மூடத்தனம் பெருகுகிறது.

5/16. கண்மூடித்தனத்தை மண் மூடச் செய்தால் - அவன் அறிவு ஆதவனைப் போல் ஒளி பெறுகிறது.

5/17. பிறவிப்பெருங்கடலை நீந்திட வேண்டும் - அதற்கு இறைவனிடம் சரணா கதியடைந்திட வேண்டும்.

5/18. அந்தணரையும் ஆதி மனிதரையும் விலங்குகளையும், ஒன்றென காண்பதே சான்றோர்கள் இலக்கணம்.

5/19. எல்லாம் ஒன்றென எண்ணுபவர்கள் எல்லாம் வல்ல இறைவனிடம் எல்லாம் பெற்று இன்புறுவர்.

5/20. வேண்டுதல், வேண்டாமை, இரண்டையும் ஒன்றெனக் கண்டவன் ஆண்டவன் பிள்ளையே.

5/21. புலனின்பங்களில் மயங்காத முத்தி பெற்ற ஆதன் (ஆத்மா) உலக நாதனிடம் ஒன்றி விடுகிறான்.

5/22. புலனுக்கு இன்பம் தரும் பொருட்கள் யாவும் உடலுக்கு துன்பமும் தரும்! என்பதை அறிவாய்!

5/23. காம,கோப, குரோதங்களை வென்றவன் விவேகி, அவன் விதியை மதியால் அறிவான், வெல்வான்!

5/24. பேரறிஞன் என்ற பெயரைப் பெற்றவன், உலக நாதனின் உயிரோடு இணைந்தவன்.

5/25. பாவமற்ற, ஐயமற்ற, கருணை மிக்க சரணாகதி யாளர்கள் ஆண்டவன் அருள்பெறுவர்.

5/26. நன்னெறிகள் நான்கையும் நன்கு கற்றவரைச் சுற்றி நான்கு பக்கமும் நான் முகன் இருக்கிறார்.

5/27. கண்களின் பார்வையை புருவ நடுவில் நிறுத்தி உள் வெளி மூச்சுகளை சீராக்கி புலன்களையும்;

5/28. மனதை ஒடுக்கி எதையும் சிந்தியாமல் இறையையே சிந்தித்து, ஆசை, கோபங்களை விடுவாயாக!

5/29. உன் நண்பன் இருக்கிறேன் அமைதி பெறுவாய் - யாம் உலகெலாம் நிறைந்த உலக நாதன்.



# அதிகாரம் - 6

## தியானப் பயிற்சி விளக்கம் [ தியான யோகம் ]

6/1. தீயின் பயனைத் துறந்தவன் சந்நியாசி, செயலை மறந்தவன் துறவியல்ல! செயலில் பலனைப் பாராதவனே துறவி.

6/2. ஆசைகளை விடாதவன் துறவியல்ல, யோகி என்பதும் துறவி என்பதும் ஒன்றே!

6/3. இல்லறமும் துறவறமும் இரு கண்கள் உள்ளத்தில் நல்ல உள்ளம் உறங்காது. இது வல்லவன் வகுத்தது.

6/4. 'யோகாரூடன்' என்பது தீச்செயல்கள் தீய ஆசை தீயோர் நட்பு இவைகளை விட்ட நல்லறத்தான்.

6/5. அறிவை பெருக்கவும் இழக்கவும் மனமே காரணம் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் மனமேகாரணம்.

6/6. தன்னை வென்றவன் தனக்கே நண்பனாகிறான் தன்னை இழந்தவன் தனக்கே எதிரியாகிறான்.

6/7. தட்ப, வெப்பம், இன்ப, துன்பம், மான, அவமானம் இவை மனதை வென்ற மகாத்மாக்களுக்கு இல்லை!

6/8. ஞான விஞ்ஞான புலன்களைக் கடந்தவன் மண்ணும் பொன்னும் ஒன்றெனக் கண்டவன்.

6/9. நல்லவன், கெட்டவன், நண்பன், பகைவன், யோகி போகி எல்லாரையும் ஒன்றாகப் பார்ப்பவன்.

6/10. முற்றும் துறந்த முனிவன் தனிமையிலிருந்து தன் ஆத்மாவை பரமாத்மாவுடன் சேர்ப்பான்.

6/11. தர்ப்பை, மான் தோல், துணி இவைகளால் ஆன உயரமான இருக்கையை அமைக்கவும்.

6/12. அவ்வித இருக்கையில் அமர்ந்து உள்ளத்தை ஒடுக்கி யாகத்தைப்பயில வேண்டும்.

6/13. உடல், தலை, கழுத்து சீராகவும் நேராகவும் வைத்து மூக்கின் நுனியைப்பார்க்க வேண்டும்.

6/14. ஆசை, அச்சத்தை விட்டிட வேண்டும் ஆண்டவனே கதி என்று அண்டிட வேண்டும்.

6/15. இப்படி இடைவிடாது இறைவனைப் போற்றிட வேண்டும்! இறைவனின் திருவருளைப் பெற்றிட வேண்டும்.

6/16. அதிகமாக சாப்பிடுகிறவனுக்கும், அதிகமாக தூங்குகிறவனுக்கும் இப்பயிற்சி கிட்டாது.

6/17. துக்கத்தைப் போக்கும் கலைக்கு உணவு பகையாகும் துக்கத்தைப் நீக்கும் கலைக்கு தூக்கம் பகையாகும்.

6/18. சித்தம் தூய்மையாகி பக்தியானவன்! அவன் பக்தி தூய்மையாகி முக்தியானவன்.

6/19. அமைதியான விளக்கு அழகாக இருக்கும்! ஆன்ம நேயன் மனமும் அமைதியாக இருக்கும்.

6/20 மனதை நிறுத்துவது பயிற்சியால் நடக்கும்! பரம திருப்தி நுண்ணறிவால் கிடைக்கும்.!

6/21. அந்தப்பரம திருப்தியைக் கண்டவன் பரமனை இருகப்பிடித்துக கொண்டவன்.

6/22 பரம அமைதிக்கு மேல் எதுவும் அமைதியில்லை! அதற்குப் பயிற்சி பெற்றவன் கலங்குவதில்லை.

6/23 இல்லறத்திலிருந்து துறவு கொள்வது ஒரு கலை! அதை உரிய காலத்தில் உற்சாகத்துடன் செய்க.!

6/24 மன ஓட்டத்தால் எழும் ஆசைகளை முடக்கு! புலன் கூட்டத்தால் எழும் பாசங்களை அடக்கு!

6/25 படிப்படியாய் பயிற்சி செய்து பௌதிக ஆசையை விடு! பரமனை மனதில் வைத்து பக்தியை எடு!

6/26 நிலையில்லாமல் அலைபாயும் மனக்கடலை, அலை பாய விடாமல் (பக்தியால்) அடக்க வேண்டும்.

6/27 மன அமைதி புண்ணியம் பற்றின்மை உடைய இந்த யோகியே பேரின்பம் அடைகிறான்.

6/28 இந்த யோகி எனும் துறவி தன் பயிற்சியால் தன் ஆத்மாவை பரமாத்மாவுடன் சேர்க்கிறான்.

6/29 அந்தத் துறவி அங்கு இங்கு எனாதபடி எங்கும் உள்ளான் எங்கும் நிறைந்தவன் ஆதன்!

6/30 சம நோக்கில் துறவி உலகைப் பார்க்கிறான், அவனை இமைக்காத கண்ணன் நான் பார்க்கிறேன்.

6/31 ஏகத்துவ கொள்கையுடன் என்னைக் காண்பவன் எவ்வகைச் செயலிலும் என்னையே காண்பவன்.

6/32 சமதர்மத்துறவி பிறர் சுக துக்கத்தைத் தன்னுடைய சுக துக்கமாகப் பார்ப்பவன்.

6/33. மதுசூதனா! அந்த சமத்துவப் பார்வையை என் சஞ்சல மனதால் பார்க்க முடியவில்லையே!

6/34. காற்றை நிறுத்துவது கடினமானது அதுபோல் திடமான மனதை அடக்குவது கடினமானதே.

6/35. அர்ச்சுனா! மனம் கவர்ச்சியை நாடும் - அதை முயற்சியாலும் பயிற்சியாலும் அடக்க வேண்டும்.

6/36. மனதை அடக்காதவன் துறவியல்ல இது சத்தியம்! மனதை அடக்குவது எளிது இதுவும் சத்தியம்!

6/37. "கண்ணா! மனதை அடக்கும் கலையில் தோல்வி கண்டவன் நிலைப்பாடு என்ன?

6/38. உன்னை அறியும் நுண்ணறிவு இல்லாதவன் கார் மேகமாய் கலைந்து விடுவானோ?

6/39. என் ஐயத்தை போக்குங்கள் அந்த அதிகாரமும், அறிவாற்றலும் உமக்கே உரியது".

6/40. அர்ச்சுனா! மனவளக் கலையில் தோல்வியுற்றாலும் அவன் பக்திக்காக இம்மை மறுமையில் இடமுண்டு!

6/41. அந்த பக்தன் மேலுலகம் சென்று மேற்குடியில் பிறக்கின்றான். பிறவி தவிர்க்க முடியாதது.

6/42. அல்லது ஞானிகள் குடியில் பிறக்கிறான், அரிதான செயல்தான் அதுவும்.

6/43 மனவளக்கலையை போன பிறவியின் மனப்பதிவு களைப் பெற்று மேலும் பயிற்சி செய்கிறான்...

6/44 கடவுள் அருளால் சமதர்மப் பயிற்சியினால், கர்மபலன் பாராமல் கடந்து போகிறான்.

6/45 முயற்சியுடன் பயிற்சி செய்யும் பக்திமான், வளர்ச்சியும் பரிசுத்த மன மலர்ச்சியும் பெறுவான்.

6/46. தபசிகளைவிட, வேதியர்களைவிட துறவி மேலானவன். பிரதி பலன் பாராதவன் துறவி!

6/47. அந்தத் துறவிகளில் என்மீது அன்பு அக்கறை கொண்டவர்களை நான் மிகவும் விரும்புகிறேன்.

# அதிகாரம் - 7

## ஆன் மீகமும் அறிவியலும்
## [ஞான விஞ்ஞான யோகம்]

7/1. அர்ச்சுணா! என்னையே கதி என்று என்னேரமும் தன்னையே தந்தவனே! உண்மையைக் கேள்!

7/2. எம்மைப்பற்றி விஞ்ஞான மொழியில் விளக்கு கிறேன்! செம்மையான கருத்து செவிசாய்!

7/3. ஆயிரத்தில் ஒருவன் என்னை அறிகிறான் - அதிலும் உண்மை நிலையை உணர்ந்தவர்கள் மிகக்குறைவு.

7/4. உயிர் இல்லாத நீர், நெருப்பு, காற்று, மண், விண், அறிவு, மனம் ஆற்றலின் மூலப்பொருள்' 'அபரா...'

7/5. இந்த எட்டு வகை கூட்டணியால் உருவாகும் உயிர் இனங்களின் மூலப்பொருள் 'பரா.' (பரமாணு)

7/6. பரா, அபரா, என்ற இருவகை மூலத்தில் இருந்தே பிரபஞ்சம் அமைக்கப்பட்டுள்ளது.

7/7. மணியும் நூலும் போல் என்னுடன் இந்த பரா, அபரா மாலையாக்கப்பட்டுள்ளது.

7/8. நீரில் சுவையாக, கதிரவன் நிலவின்ஒளியாகவும் கதிராக வேத ஒலியாகவும், ஆண்களின் ஆற்றலாகவும்...

7/9. மலரின் மனமாகவும், நெருப்பில் சுடராகவும், உயிரினங் களின் உயிராகவும், தவங்களின் பலனாகவும்...

7/10. உயிர்களின் விதையாகவும், விந்தாகவும் அறிஞர் களின் அறிவாகவும், அருளாளரின் அருளாகவும்...

7/11. பற்றற்றவர்களின் வைராக்கியமாகவும், வேதங்களின் நாதமாகவும் யாம் இருக்கிறோம்.

7/12. முக்குணங்களும் என்னிடம் இருந்தே தோன்றுகிறது. அக்குணங்களை அழிப்பவன் யாம்

7/13. முக்குணங்களால் மோகத்தில் மூழ்கிக் கிடக்கின்றீர்! அக்குணங்களை அழிப்பவன் யாம்.

7/14. எக்குணம் எனக்குரியது என்று அறிந்தவர்கள் முக்குணங்களை விட்டு முக்தி பெறுவார்கள்.

7/15. எம்மை அறிய விழையாத, இழி செயல் புரிந்தவன், அறிவதும் இல்லை, நற்கதி அடைவதும் இல்லை.

7/16. எமக்கு அருள் வேண்டுவோர், பொருள் வேண்டு வோர், அறிவு வேண்டுவோர், இன்பம் வேண்டுவோர்...

7/17. இந்த நான்குவகை பக்தர்கள் உண்டு! இறைவனின் தத்துவத்தைக் கற்று இவர்கள் இன்புறுவர்!

7/18. இந்த நான்கு பக்தர்களும் நன்மைகளை பெற்றாலும் ஞானியே உயர்ந்த நிலைப் பெற்றவன்.

7/19. ஞானியின் கடைசிப் பிறவி இது! இந்த மனிதப் பிறவியால்தான் இறைவனைக் கவர முடியும்.

7/20. எந்தெந்த ஆசைகள் தோன்றுமோ அதற்குரிய அந்தந்த நியமங்கள் படி தேவதை வழிபாடு செய்வர்.

7/21. பக்தன் எந்தெந்த தேவதைகளின் அருளாசி வேண்டுகிறானோ அதை நானே வழங்குகிறேன்.

7/22. கிராம, தேவதைகளை வழிபடுவோரே! அந்த தேவ தேவதைகளை இயக்குபவன் யாமே.

7/23. அவர்கள் பெற்ற அருளும் ஆசியும் அற்பத்தனமானது, சிறுதெய்வ வழிபாடும் என்னிடமே சேருகிறது.

7/24. ஈடு இணையற்ற ஆதியந்தமற்ற மூவுலகை ஆளுகின்ற எம்மை அறிவதில்லை சிலர்!

7/25. மாய நிலையில் இருக்கும் எம்மை அறியாமல் மனித நிலையில் உருவமாக நினைக்கிறார்கள்.

7/26. முக்காலமும் அறிந்த எம்மை முயற்சி பயிற்சியால் எக்காலமும் நினையாமல் ஏமாந்து போகிறார்கள்.

7/27. வெறுப்பு விருப்பு, நன்மை தீமை எனும் மாயையில் மயங்கிக் கிடக்கின்றனர், மயக்கக் குணத்தவர்.

7/28. பலன் பாராமல் செயல்புரியும் பண்பாளர் விருப்பு வெறுப்பற்ற விற்பன்னர் என் பக்தர்கள்.

7/29. மோட்சம் பெற முனைகின்ற சான்றோர்கள் ஜீவாத்மா பரமாத்மா வேறுபாடு அறிவார்கள்.

7/30. அழியக்கூடியது, அழியாதது, உருவ, அருவ, அருவுருவ வேறுபாடுகளை எம் அடியார்கள் நன்கறிவார்கள்.



# அதிகாரம் - 8

## பரமபத விளக்கம் [அக்ஷரப்பி ரம்ம யோகம்]

8/1. தேவா! பிர்மம் அத்யாத்மம், கர்மம், அதிபூதம், அதிதைவம் என்பதெல்லாம் என்னா? மற்றும்

8/2. அதியக்ஞன் என்பவர் யார்? எங்கே உள்ளார்? இறக்கும்போது இறைவனைக் காண முடியுமா?

8/3. பிர்மம் என்பது பிறப்பில்லாதது, அத்யாத்மம் என்பது அறிவு, கர்மம் என்பது கடன்; பணி; கடமை.

8/4. அதிபூதம் = சிவம்; அதிதைவம் = பிருமா; அதியக்ஞன் = அடியேன் (திருமால்)

8/5. இறக்கும் வரை என் நினைவாகவே, இருப்பவன் இறந்தபிறகு என் நிழலாகவே இருக்கிறான்.

8/6. இறக்கும்போது எந்த சிந்தனையில் இருந்தானோ பிறக்கும் போது அதையே அடைகிறான்.

8/7. என்னையே நினைத்து எப்பொழுதும் இரு! என்னையே சரணடைந்து கடமையைச் செய்.

8/8. பகவானை என்றும் மறவாதிருப்பவர்கள் பகலவனைப் போன்று ஒளிபெற்று வாழ்வர்.

8/9. எட்டு குணங்களும் எண்ணற்ற பண்புகளும், அறிவுக்கு எட்டாத நிலையில் உள்ளது எனது அரசு.

8/10. சாதனைக் கற்றவன் ஆதனை விடும் போது புருவ நடுவில் வேதனையின்றி வெளியேற்றுகிறான்.

8/11. வேதியர்கள், துறவிகள், இல்லறத்துறவிகள் மகா மனிதர்கள் போற்றிடும் பரமபதம் பற்றி தெரியுமா?

8/12. சுற்றுச் சூழலை மறப்பதே புலனடக்கம், மனதை இதயத்திலும் மூச்சை தலை உச்சியிலும் நிறுத்துக!

8/13. அந்நிலையில் 'ஓம்' எனும் மந்திரத்தை உச்சரித்தபடி ஆதனை விடுபவன் பரமபதம் அடைகிறான்.

8/14. இமைப் பொழுதும் மறவாமல் நினைப்பவர்கள் தடங்கல் இல்லாமல் எம்மிடம் வந்தடைகின்றனர்.

8/15. மகாத்மாக்கள் என் மனதில் அமர்ந்த பிறகு, மறு ஆத்மா பிறவி இந்த மண்ணில் எடுப்பதில்லை.

8/16. பிரும லோகம் போனாலும் பிறவி யுண்டு காலத்தை வென்ற பக்தனுக்கு அது இல்லை.

8/17. பிர்மாவுக்கு ஒரு பகல் என்பது 4 யுகங்கள் அதாவது 43,20,000 ஆண்டுகள் (இப்போதைய கணக்குப்படி)

8/18. பிர்மாவின் பகல் பொழுதில் உருவங்கள் உதிக்கின்றன இரவில் அருவமாய் மறைகின்றன.

8/19. பிர்மாவால் இப்படி மாறி மாறி படைக்கப்படுகிறது. பிர்ம நிலைக்கு 'அழிவு' என்ற ஒன்று உண்டு.

8/20. எத்தனை யுகங்களில் எவை எவை அழிந்தாலும் எம்முடைய உலகம் அழிவதில்லை.

8/21. அருவமாக, அழிவில்லாததுமாக, ஆதிஇல்லாததாக அந்த மில்லாததாக உள்ளதே எமது உலகம்.

8/22. அணுக்களின் பகுதியாய் இருந்து அகிலத்தில் நிறைந்துள்ள எம்மை எளிய பக்தியால் பார்க்கலாம்.

8/23. யோகிகள் எப்பொழுது பிறவி எடுப்பார்கள் பிறவி எடுக்காமல் விடுவார்கள் என்பதை போதிக்கவா?

8/24. பகல்வேளை வளர்பிறை, நல்ல சுக்ல பட்ச உத்தி ராயணத்தில் மரித்தால் பிர்ம லோகம் கிடைக்கும்.

8/25. தட்சிணாயின காலத்தில் இரவு நேரத்தில் கிரு'ழ்'ண பட்சத்தில் மரிப்பவர் சந்திர லோகம் சென்று மறு பிறவி எடுப்பார்.

8/26. வளர்பிறையில் மரிக்கும் துறவி பிறவியில்லை. தேய்பிறையில் மரிக்கும் ஆசையுள்ளவர்க்கு பிறவி உண்டு.

8/27. இதை அறிந்து கொண்டவன் ஆசை கொள்வதில்லை அவனைப்போல் நீயும் யோகியாகுக!

8/28. வேதம் ஓதுதல், யாகம், தியாகம் செய்தல், தான தவம், தர்மம், செய்பவர்கள் பரமபதம் அடைவர்.

# அதிகாரம் - 9

## மறைபொருள் விளக்கம்

## [ ராஜ வித்யா ராஜ குஹ்ய யோகம் ]

9/1. துன்பம் நிறைந்த இந்த உலக பந்தம் சூழாதபடி இன்பம் தரும் இனிய அறிவை இதோ பெறுவாய்:

9/2. ஞான வித்தைகள் போற்றப்பட வேண்டியது, புனித மானது, புரியக் கூடிய எளிமையானது.

9/3. இந்த அறச்செயல்களை அறியாதவர்கள் சம்சார சாகரத்தில் இம்சையடைகிறார்கள்.

9/4. அண்டம் அனைத்தும் (அணு) என்னால் கட்டப் பட்டுள்ளது. ஆனால் நான் தென்படுவதில்லை.

9/5. படைத்தல், காத்தல், அழித்தல் யாம் செய்தாலும் அணுவுக்கும் அப்பாற்பட்டவன் யாம்.

9/6. விண்ணகத்தே பலவகைக் காற்றுகள் நிறைந்துள்ளது போல் மண்ணகத்தே உயிர்கள் என்னுள் நிறைந்துள்ளது.

9/7. கல்பகால முடிவில் உயிர்களை மறைப்பேன், கல்ப கால துவக்கத்தில் மீண்டும் படைப்பேன்!.

9/8. அணுத்தொகுதியான இவ்வுலகத்தை என் பகுத்தறிவைக் கொண்டு பலவிதமாகப் படைப்பேன்.

9/9. அந்தச் செயல்களைப் பற்று, பாசம் பந்தமற்று ஒரு நியதியின்படி செய்கிறேன்.

9/10. உலகங்கள் எம்மால் உருவாக்கப்படுகிறது. காலங்கள் கணிதப்படி அவை படைக்கப்படுகிறது.

9/11. மனித வடிவங்களில் நான் தோன்றும்போது அவநம்பிக்கை, அவமானங்களில் விழுகிறேன்.

9/12. பேராசை, வீண்செயல், அரக்க மனம், இரக்கமின்மை இவைகளை விடச் சொன்னால் விடுவதில்லை.

9/13. எண்ணங்களை, இதயங்களை பார்ப்பவன் என்று இறையன்பர்கள் மட்டும் இறையச்சம் பெறுவர்.

9/14. உறுதி மனம் கொண்டவர்கள் இடை விடா சிந்தனையில் எம்மையே கீர்த்தனை செய்கிறார்கள்.

9/15. சிலர் அருவமான எம்மை, 'ஒருவனே தேவன்' என்பர், சிலர் வேறு வேறாய் காண்பர்.

9/16. தேவதை, இறந்தவர்க்கான சடங்குகளும், யாகத்திற்கான பொருட்களும், மந்திரமும் யாமே.

9/17. படைத்து பயனளிப்பவனும்; மூதாதையர்களை அறிந்தவனும்; ஓங்காரமும்; வேதங்களும் யாமே.

9/18. நற்கதியும் காத்தலும், பொறுப்பும் நன்மையும் தீமையும், இருப்பிடம், புகலிடமும், நண்பனும்...

9/19. பிரளய காலத்தின் முதல் அணுவாக கதிரவன் ஒளியாக, மழையாக காலத்தால் அழியாதவன் யாம்!

9/20 வேதங்கள் மூன்றின் விதிமுறைகள் படி வேள்விகள் செய்தவர் வேந்தர் போல் வாழ்வார்.

9/21. புண்ணியம் பண்ணியவர்களின் அளவுபடி விண்ணுலகில் சுகம் பெற்று மண்ணுலகம் வருவார்.

9/22 பலன் பாராது பரமனாகிய எம்மை நித்தம் நித்தம் பணிபவர்களுக்கு பரலோகச் சுகத்தைப்பகர்வேன்.

9/23. சிறு தெய்வ வழிபாடு சிறப்பில்லை என்றாலும் எதை எதை வணங்கினும் என்னையே வணங்கியதாகும்.

9/24. வேள்விகளை ஏற்பவனும், தேவர்களை காப்பவனும் யானே என்பதை அறியாமல் வீணே வீழ்கிறார்கள்.

9/25. சிறு தெய்வ வழிபாடு, மறைந்தவர் வழிபாடு, பூதவழி பாடெல்லாம் பிரம்மத்தைவிடப் பெரிதில்லை!

9/26. பலன் கேட்காமல் சமர்ப்பிக்கும் இலை, மலர், நீர் ஆகியவற்றை அளவற்ற அன்புடன் ஏற்கின்றோம்.

9/27. உன் கடமை, உணவு, தானம், தனம் அனைத்தையும் 'கண்ணனுக்கே' என்று அர்ப்பணம் செய்.

9/28. அப்படி அர்ப்பணம் செய்யும் துறவிகளை தீங்கில்லாமல் தீர்க்க தரிசியாக்குவோம்.

9/29. எல்லா உயிர்களையும் இயக்குகிறோம். பக்தர்களின் அறிவையும் இயக்குகிறோம்.

9/30. தீயவர்கள் பாவத்தை நீக்கி தூயவர்கள் ஆகலாம்; அவர்கள் மனம் திரும்ப வேண்டும்.

9/31. என் பக்தன் அழிவதில்லை இது சத்தியம்! என் பக்தன் அமைதியடைகிறான் இது நித்தியம்.

9/32. பெண்கள், வணிகர், தொழிலாளர்கள் முரடர்கள் அனைவரும் என் பக்தியால் சுவர்க்கம் பெறலாம்.

9/33. அந்தணர்கள், அறவோர்கள் அரச முனிவர்கள்போல், நீயும் வழிபடு! வாழக் கற்றுக் கொள்.

9/34. மனம், புத்தி புலன்களை என்னிடம் கொண்டு வந்துவிடு! உன்னை என்னிடம் தந்து விடு.



# அதிகாரம் - 10

## பெருமாள் பெருமை விளக்கம் [விபூதி யோகம்]

10/1. அன்புடைய அர்ச்சுணா! உன் நலன் கருதி மீண்டும் பொருள் பொதிந்த கருத்துக்களைத் தருகிறேன்.

10/2. தேவ கணங்களும், மகா ரிசிகளும், என் படைப்பின் ரகசியங்களை அறியார்.

10/3. எம்மை இறப்பு பிறப்பு அற்றவன், உலகத்தின் மூலப் பொருள் என்று அறிபவன் அறிவு பெற்றவன்.

10/4. புத்தி, ஞானம், துறவு பொறுமை, உண்மை, புலனின்பம் இன்பம், துன்பம், தோற்றம், அழிவு, அச்சம், துணிவு.

10/5. அகிம்சை, சம நோக்கு, மகிழ்ச்சி, தவம் தானம் கீர்த்தி அபகீர்த்தி இவைகள் எல்லாம் யாமே.

10/6. சனகர் போன்ற 4 முனிவர்களும், 7 ரிசிகளும், சிவாயம்புவர் போன்ற 14 மனுக்களும் யாமே.

10/7. எனது தத்துவத்தைப் புரிந்து கொண்டவன் மனது மாறாத பக்தனாக அழைக்கப்படுகிறான்.

10/8. இயங்குவதும், இயக்குவதும் நானே என்பதை அறிந்த பக்தனுக்கு 'ஞான யோகி' எனப் பெயர்.

10/9. எம்மை புகழ்வதே மகிழ்ச்சி, எம்மை நினைப்பதே சுகம், எம்மைக்காண உயிரையும் தருவது உண்மை.

10/10. என் உண்மையான பக்தர்களுக்கு எனது தத்துவ ஞான யோகத்தை அளிக்கின்றேன்.

10/11. அவர்கள் உள்ளத்தில் குடியேறி, ஞானம் எனும் ஒளிவிளக்கால் அசுத்தத்தை நீக்குகிறேன்.

10/12. "நீங்களே பரம் பொருள் பரமபதம், புனிதர் எங்கும் நிறைத்தவர் தெய்வீகர், முழுமுதற்கடவுள்".

10/13. நாரதரும், தபசிகளான அசிதரும் தேவரும் மகரிசியான வியாசரும் பேசிய புகழுரை அது.

10/14. தர்மம் காக்க நீர் எடுத்த இந்த பேருருவை தேவர் களும் அசுரர்களும் அறியார்.

10/15. உயிரின் உயிரே! உயிரின் மூலமே! தேவ தேவே! செகநாதனே! புருசோத்தமா! கண்ணா!

10/16. எந்த ஆற்றலால் உலகில் கலந்துள்ளீர்களோ அந்த ஆற்றலை நீரே விளக்க வல்லவர்.

10/17. இறைவா! எப்படி உன்னை சிந்தையில் சிந்திப்பது? எந்தந்த உருவை நான் சிந்தையில் கொள்வது?

10/18. கேட்க கேட்க சுகமாக இருப்பதால், உங்கள் படைக்கும் இயக்கத்தை விரிவாகக் கூறுங்கள்?

10/19. "என்னைப் பற்றிச் சொல்லக் காலவறை கிடையாது அதன் தெய்வீகத்தை மட்டும் கூறுகிறேன்.

10/20. உயிரினங்களின் அறிவாக, மனசாட்சியாகவும், உயிரினங்களின் ஆதியந்தம் நடுவாக இருக்கிறேன்!

10/21. அதிதியின் புதல்வருள் வி'ழ்'ணு; ஒளியில் கதிரவன்; வாயுவில் தேசஸ்; விண்மீன்களில் மதி;

10/22. வேதங்களில் சாம வேதம், தேவர்களுள் இந்திரன் புலன்களில் மனம் உயிர்களில் ஞானம்.

10/23. உருத்திரருள் பரமன், யசர், அரக்கர் இவர்களுள் குபேரன், வசுக்களில் நெருப்பு, மலைகளுள் மேரு.

10/24. புரோகிதர்களில் பிர்மா, தளபதிகளில் கந்தன், நீர் நிலைகளில் பெருங்கடல்.

10/25. ரிசிகளில் பிருகு, எழுத்துகளில் அகரம், வேள்வி களில் மந்திரம், அசையா பொருளில் இமயம்.

10/26. மரங்களில் அரசமரம், தேவ ரிசிகளில் நாரதர் கந்தர்வர்களில் சித்திரரதன், சித்தர்களில் கபிலர்.

10/27. குதிரையில் உச்சை சரவஸ், யானைகளில் ஐராவதம், மனிதரில் மாமன்னன்.

10/28. ஆயுதங்களில் வஜ்ராயுதம், பசுக்களில் காமதேனு, பேறுகளில் காமனாக, பாம்புகளில் வாசுகியாக,

10/29. நாகங்களில் ஆதிசேசன், நீர்த்தேவதைகளில் வருணனாக, பித்ருவில் அர்யமா, நீதியில் எமனாக;

10/30. அசுரர்களில் பிரகலாதனாக, கால நீதியில் காலனாக, விலங்கில் சிங்கமாக, பறவைகளில் கருடனாக;

10/31. நான் தூய்மையில் காற்றாக, வில்லில் ராமனாகவும், நீரினங்களில் முதலையாகவும், நதிகளில் கங்கையாக;

10/32. படைப்பில் அடி முடி நடுவுமாக, வித்தைகளில் பிரம்ம வித்தையாக, கருத்தறிவதில் நீதிமன்றமாகவும்;

10/33. எழுத்துகளில் 'அ' வாக, தொகைகளில் உம்மைத் தொகையாக, காலங்களுகெல்லாம் காலமாகவும்,

10/34. இறப்பு பிறப்பு தேவதை, கீர்த்தி தேவி, திருமகள், கலை மகள் ஸிம்ருதி, மேதாதேவி, திருதி, சகாதேவி.

10/35. கானத்தில் சாமவேதமாக, ஒலிகளில் காயத்ரியாக, மாதங்களில் மார்கழியாக, பருவங்களில் வசந்தமாக;

10/36. சூதர்களில் சூதாட்டம், போராளிகளின் வெற்றியாக, அறிவில் பகுத்தறிவாக, குணங்களில் சத்துவமாக;

10/37. கண்ணனாக, பாண்டவர்களில் அர்சுணனாக, முனிவர்களில் வியாசராக, கவிஞர்களில் சுக்ரனாக.

10/38. அடக்கும் சக்தியாக, நீதியரசராக, மௌனமாக, ஞானிகளின் தத்துவ ஞானமாக இருக்கிறேன்.

10/39. உயிர்களின் விதையாக, அனைத்து உயிர்களையும் இயக்கும் சக்தியாக இருப்பது யாமே!

10/40. இப்படி என் தெய்வீக உருவத்திற்கும் எமது இயக்கங்களுக்கும் முடிவு இல்லை.

10/41. எவையெல்லாம் முதன்மை சிறப்புடையதோ அவையெல்லாம் என் ஒளியின் வெளிப்பாடே

10/42. மூவுலகையும் நான் மூல அணுவாக இருந்து ஆளுகை செய்து கொண்டிருக்கிறேன்.



# அதிகாரம் - 11

## பேருரு காட்சி [ விசுவரூப தரிசனம் ]

11/1. "தங்கள் மெய்ஞ்ஞான போதனையால் எனது அஞ்ஞானம், அறியாமை, அழிந்தது கண்ணா!"

11/2. உயிரினங்களின் ஆக்கல் அழித்தல் உன்னிடமிருந்தே எழுகிறது என்பதை அறிகிறேன் கண்ணா!

11/3. உங்களுடைய பேரறிவு பரமத் தன்மை, சக்தி, பலம், விவேகம், தெய்வ ரூபம் இவற்றைக் காண்கிறேன்!

11/4. பிரபு எனக்கு தகுதியிருப்பதாக நீங்கள் நினைத்தால் உங்கள் உண்மை உருவத்தை கண்முன் காட்டுவீராக!

11/5. பார்! ஆயிரக்கணக்கான உருவங்களையும் பல நிறம், பலவிதங்களில் என் தெய்வீக உருவைப்பார்.

11/6. என்னுள் 12 கதிரவன்கள், 8 வசுக்கள், 11 உருத்திரர்கள், அசுவினிகுமாரர்கள், 49 வாயுக்கள்.

11/7. என் ஒரே உடலில் நீ காண விரும்பும் அனைத்து, அண்டசரா சரங்களையும் கண்டு பயப்படாதே!

11/8. உன் ஊனக்கண்ணால் பார்க்க முடியாது, நான் ஞானக்கண் தருகிறேன் பார்!

11/9. பாவங்களை ஓட்டும் பகவான் தன் பேருருவை காட்டுகிறார்! அங்கே அர்சுணனுக்கு.

11/10. பல தரப்பட்ட முகங்கள் கண்கள், தெய்வீக அணி கலன்கள், ஆயுதங்கள் ஏந்தி, மாலைகளுடன்.

11/11. தெய்வீக வாசனை வீசவும், எல்லா பக்கமும் திருமுகங்களை கொண்டும் தன்னை காட்டுகிறார்.

11/12. ஆயிரக்கணக்கான கதிரவன் ஒரே இடத்தில் தோன்றியது போல் ஒளி வெள்ளம் பெருகியது.

11/13. அர்ச்சுனன் பல சூரிய குடும்பங்களை, கண்ணன் திரு உருவில் இருப்பதைப் பார்க்கிறான்.

11/14. வியப்பிலே தடுமாறிய அர்ச்சுனன் பக்தியோடு பயந்து போய் தலை வணங்கி கை கூப்புகிறான்.

11/15. தேவனே! உங்களுள் தேவர்களையும் அஃறினை உயிர்களையும், பிர்மா, சிவனையும், கண்டேன்!

11/16. எண்ணிலடங்காத உருவங்களையும் காண்கிறேன். அடிமுடி இடையும் காண முடியவில்லையே!

11/17. கதிர்வீசும் ஒளிப்பிழம்பாக மணிமுடி, கதை, சக்கரத்தோடு காண்பதற்கு கண் கூசுகிறதே கண்ணா!

11/18. காலத்தை வென்றவன் நீ! பரவெளியின் அறிவு நீ! நிதானம் நீ! தர்மம் காக்கும் தலைவன் நீ!

11/19. அடிமுடி நடு இல்லாதவனாக, ஆதவன் மதியை கண்களாகவும், தீ கக்கும் நாக்கையும் கண்டு,

11/20. விண்ணிற்கும் மண்ணிற்குமாக உயர்ந்து நிற்கும் உங்களைப் பார்த்து மூவுலகமும் நடுங்குமே!

11/21. தெரிந்த தேவர்களையும் பார்க்கிறேன், மகரிசிகள் சித்தர்கள் உன் புகழ் பாடுதலை கேட்கிறேன்.

11/22. மறைந்தவர்கள், கந்தர்வர்கள், யச்சர்கள் அசுரர்கள், சித்தர்களையும் காண்கிறேன்.

11/23. கோரைப் பற்களை கொண்டுள்ள பெரிய உருவத்தைக்கண்டு நான் நடுங்கி விட்டேன்.

11/24. பட்டொளியும், பரவசக் கண்களும் உடைய உங்களைக் கண்டு இன்னும் நடுக்கம் விடவில்லை.

11/25. கோரைப் பற்களையும் தீ நாக்கையும் கண்டு திக்கு முடிக்காடி திடுக்கிட்டு போனேன். தேவரீர்!

11/26. திருதரா'ழ்'டிரர் மகன்களும் பீ'ழ்'மரும் துரோணரும் கர்ணனும் கூட உங்கள் வாயில் புகுவதைப் பார்க்கிறேன்.

11/27. போர் வீரர்களும், தளபதிகளும் கூட புகுகிறார்கள் சில வீரர்கள் பல்லிடுக்கில் தொங்குகிறார்கள்.

11/28. கடலுக்குள் புகும் ஆற்று வெள்ளம் போல் உன் உடலுக்குள் புகும் வீரர்களைப் பார்க்கிறேன்.

11/29. விட்டில் பூச்சிகள் விளக்கில் விழுவதுபோல் கெட்டவர்கள் உன் வாயில் விழுவதைப் பார்க்கிறேன்.

11/30. அனைத்து உயிர்களையும் தன் நாக்கால் அனைத்து துழாவுகிறீர்கள் வெப்பம் வாட்டுகிறது.

11/31. "தயவு செய்து சொல்லுங்கள் நீங்கள் யார்? அருள் செய்து சொல்லுங்கள் என்ன செய்யப் போகிறீர்?"

11/32. "அதர்மத்தை அழிக்க வந்தவன் நான்! நீ பந்தத்தால் போர் புரிய மறுத்தாலும் அவர்கள் பந்தாடப்படுவர்.

11/33. கொல்பவன் நான்! புகழ் கொள்பவன் நீ! கடமையைக் காக்க புறப்படு உடமையை காக்க போர் தொடு.

11/34. துரோணர், பீ‘ழ்’மர், ஜயத் ரதன், கர்ணன், ஏகலைவன் போன்றவர் என்னால் கொல்லப்பட்டுவிட்டனர்.

11/35. கண்ணன் சொல்வதைக் கேட்டு அர்ச்சுனன் கண் கலங்குவதாக சஞ்சையன் சொல்கிறான்.

11/36. “உன் ஆற்றலைக்கண்டு அரக்கர் ஓடுவர், உன் அருளைக்கண்டு அறிஞர் பாடுவர்.

11/37. ஆதி மூலம் நீர்! வேத மூலம் நீர்! தேவதேவன் நீர்! பூத நாதன் நீர்! ஆதன் நாதன் நீர்!

11/38. ஆதி பகவன் நீர்! அறவாழி இயக்கம் நீர்! அணுக்கருவும் நீர்! ஆற்றலின் அறிவும் நீர்! அனைத்தும் நீர்!

11/39. காற்றும் நீர்! காலனும் நீர்! நீரும் நீர்! நிலவும் நீர் யாதும் நீர்! பிரம்மாவை பெற்றதும் நீர்!

11/40. எங்கும் நிறைந்தவனே! எவ்வுருவிலும் இருப்பவனே! தாங்கி நிற்பவனே! தங்களுக்கு என் வணக்கம்!

11/41. ‘கருப்பா’ என்றும் ‘இடையா’ என்றும் உன்னை அறியாமல் ஒருமையில் தீட்டி இருக்கிறேன்.

11/42. ஒரே படுக்கை, ஒரே தட்டில் உண்டிருக்கிறேன்! பல இடங்களில் பரிகாசம் செய்துள்ளேன்.

11/43. அசையும் விசையாகவும், அசையா மலையாகவும், பூவுலக குருவாகவும், மூவுலகின் கருவாகவும் நீ!

11/44. நான் சரணடைந்தேன்! உன் மகனாக, நண்பனாக, மனைவியாக என்னை நினைத்து மன்னிப்பாயாக!

11/45. பேருருவைக் கண்டு மருண்டேன், பிறகு, மகிழ்ந்தேன், தயவு செய்து மாறுக! என் அன்பு கண்ணனாக!

11/46. மணி மகுடம், கதை, சக்கரத்துடன் கூடிய, என் பழைய கண்ணனாக வடிவைக் காட்ட வேண்டுகிறேன்!

11/47. "இறை இயக்கத்தால் என்னால் காட்டப்பட்ட இந்த பேருருவை உனக்கு மட்டுமே காட்டப்பட்டது".

11/48. வேதங்களை கற்றவர்கள், தர்மம் செய்தவர்கள் கர்ம வீர்கள், தபசிகள் காண முடியாத காட்சியிது!

11/49. "அச்சுதானந்தனைக் கண்டு அச்சம் வேண்டாம் சங்கு சக்ரபாணியைக் கண்டு சங்கடம் வேண்டாம்!"

11/50. சஞ்ஜயன் கூறுகிறான், "பேருருவை மாற்றி இப்போது கண்ணனாக உருவம் எடுத்து விட்டார்" என்கிறார்.

11/51. "இயல்பான நிலைக்கு இப்பொழுது தான் வந்துள்ளேன் உங்கள் இயல்பான வடிவை கண்டு".

11/52. அர்ச்சுனா! என்னுடைய இந்த உருவத்தைக்காண தேவர்களே கூட தேடி அலைவார்கள்.

11/53. நான்கு கரத்தனாகிய என்னை உன்னைத் தவிர வேறு யாரும் எளிதில் காணமுடியாது.

11/54. அர்ச்சுனா தன்னலமற்ற பக்தியால் பார்க்கப்பட்டாய்! நான் யார் என்பதை அறிந்து கொண்டாய்.

11/55. கண்ணனுக்கே எல்லாம் கண்ணனே கதி என்று நம்பு கண்ணன் மாற்றுவான் உன் தலைவிதியை!



# அதிகாரம் - 12

## பக்தி விளக்கம் [பக்தி யோகம்]

12/1. உருவ வழிபாடு அருவ வழிபாடு இரண்டில் சிறந்த வழிபாடு எது?

12/2. உருவ வழிபாடு செய்பவர்கள் யோகிகளில் சிறந்தவராக மதிக்கப்படுகிறார்கள்.

12/3. புலன்களை கடந்து, உள்ளத்தைக் கடந்து, எங்கும் நிறைந்து பேருரு கொண்டு விளக்க முடியாத...

12/4. அந்தப் பரமனின் அருவத் தன்மையை அறிந்து இரண்டையும் சமமாகக் கருதுபவர்கள் என் பக்தன்.

12/5. அருவ வழிபாடு அரிதான செயல்! உருவ வழிபாடு எளிதான செயல்! (பாமரர்களுக்கு)

12/6. நீயே கதி என்று நிதமும் தொழுபவர்கள் எம்மை தாயாக கருதி வழிபாடு செய்பவர்கள்.

12/7. மரணத்தில் துடிப்பவர்களை தக்கத் தருணத்தில் கை கொடுத்து கரையேற்றுவோம்.

12/8. புத்தி, மனதை புறந்தள்ள கற்றவரை அந்த பக்தி மான்களை வைகுந்தம் வரவேற்கும்!

12/9. இறை சிந்தனை இயலாவிட்டால், இனிய மறைகளை மனப்பாடம் செய்'.

12/10. இது கூட இயலாமல் இருந்தால் கடவுளுக்கான கடமைகளைச் செய்!

12/11. அது கூட இயலவில்லை என்றால் உன் தர்ம பலன்களை தானம் செய்துவிடு!

12/12. தத்துவப்பயிற்சியிலும் தத்துவ அறிவுமேல்; அதிலும் தியானங்கள் மேல்; அதிலும் தியாகம் மேலானது.

12/13. எவன் விருப்பு வெறுப்பற்று, நான் எனும் செருக்கற்று, துன்பத்திற்கு துவலாதமனம்!...

12/14. பழி வாங்கா மனம், அமைதி மனம், அர்ப்பணித்தல் மனம், நம்பிக்கை மனமுடையவர்கள்.

12/15. உயிர்களை பாதிக்காமல் உயிர்களால் பாதிக்காமல் உணர்ச்சிகளால் பாதிக்காதவன் பாதிப்பதில்லை.

12/16. பலன் கருதாமை, அகத்தூய்மை, புறத்தூய்மை, தன்மை வேறுபாடின்மை, இனிமை காண்பவர்கள்.

12/17. அதிகம் மகிழாமை, இகழாமை, துவலாமை, ஆசையின்மை, தீயவை செய்யாமை கயமை;

12/18. பகை, நட்பு, இன்பம், துன்பம், இகழ், புகழ் தட்பவெட்பம் இவைகளை சமமாகவும்...

12/19. சம நோக்கு சிந்தனையில் உள்ளத்திலும் இல்லத்திலும் இடையூறு செய்யாதவன்...

12/20. நம்பிக்கையோடு இந்த தர்ம அமுதத்தை தன்னம்பிக்கையோடு ஏற்பவர்கள் என் பக்தர்கள்.

# அதிகாரம் - 13

## உடல், அறிவு வேற்றுமை விளக்கம் [க்ஷேத்திர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்]

13/1. கண்ணா! உடலையும் அதன் அறிவையும் அது அறியும் பொருளையும் விளக்க வேண்டுகிறேன்.

13/2. “இந்த உடலும் ஒரு சேத்திரம் தான் இதை அறிந்தவன் சேத்திரக்ஞன் மெய்ஞ்ஞானி’.

13/3. மெய்ஞ்ஞானி யாம்! உடல், அறிவு இவைகளின் இயல்புகளை இயற்கையை அறிவது நன்று!”

13/4. அது எத்தகையது? எப்படியானது? எப்படி தோன்றியது? அது யார்? அதன் பெருமை என்ன?

13/5. உபநிடதங்கள்; வேதங்கள் அதை பிரித்து பரம ஞான வடிவில் ஓதப்பட்டிருக்கிறது.

13/6. ஐந்து பூதம், அகந்தை, அறிவு, மூன்று குணம், மனம், பத்து புலனுணர்ச்சிகளைக் கொண்டது உடல்.

13/7. விருப்பு, வெறுப்பு, இன்ப, துன்பம், உடல் உறுப்புகள் மனம் வைராக்கியம் இவைகளைக் கொண்டது உடல்.

13/8. தற்பெருமையற்று, நடிக்காமல், யாரையும் துன்புறுத்தாமல், அகம், புறம், தூய்மையாய் பணிவாய்...

13/9. இம்மை மறுமைகளில் பற்றற்று செருக்கற்று பிறப்பால் உருவாகும் மூப்பு, பிணி, இறப்பை அறிந்திடு....

13/10 மனைவி, மக்கள் குடும்பம் செல்வம் இவற்றிலிருந்து விடுபட்டு பற்றற்ற நிலையில் வாழ்ந்திடு...

13/11. என்னிடம் கூட எதுவும் வேண்டாமல் பக்தி செய்! தனித்திரு, பசித்திரு, விழித்திரு, பேராசைக்காரருடன் பேசாதிரு.

13/12 ஞானம் என்பது தத்துவ உண்மைகளை காண்பது! அஞ்ஞானம் என்பது அதற்கு எதிர் மறையானது.

13/13 பரப்பிரம்மத்தை அறியும் ஞானம் வேண்டும். இருக்கிறது இல்லை எனும் நிலை அது.

13/14 அது கைகால், கண், காது, தலை, முகம் உடையது போல் எதையும் கவர்ந்து கொள்கிறது.

13/15. புலன்கள் இல்லாமலே புலனறிவும், பற்றில்லாமலே பற்றும், நிர்குணமில்லாமலே சற்குணமானது அறிவு.

13/16. அகமும் புறமும் இருப்பது, அசைவும் அசையாமல் இருப்பது, அருகில் தூரத்தில் இருப்பது.

13/17. வானம் போல் பிளவு படாமல் இருப்பது, ஆக்கல் அழித்தல், காத்தல் ஆகிய பண்புகளை செய்வது.

13/18. அருட்பெரும் சோதியானது, பகுத்தறிவு எனும் ஞானத்தால் பார்க்கப்படும் இதய தெய்வமானது.

13/19. உடல் அறிவு இவற்றை அறிந்தாய், இப்போது என் உடல், அறிவு தத்துவத்தை அறிந்து மேன்மையடைவாய்!

13/20. இயற்கையும், உயிர்களும் துவக்கமற்றது அந்த இயற்கையில் உருவானதே முக்குணம் என்பது.

13/21. காரண காரியங்கள் இயற்கை படைப்பது, கவலையும் மகிழ்ச்சியும் மனமே படைப்பது.

13/22. இயற்கை படைப்பதே முக்குணங்கள்; அந்த முக்குணங்கள் படைப்பதே நன்மை, தீமை.

13/23. சீவாத்மாவும் பரமாத்மாவும் ஒரே தத்துவமே! சீவனில் முத்தொழில் புரிவதால் யாம் பரமாத்மா.

13/24. உயிர்களின் தன்மை, இயற்கையின் தன்மை இவைகளின் உம்மையறிந்தால் மேன்மை பெறலாம்.

13/25 நுண்ணறிவாலும், தியானத்தினாலும், கர்ம யோகத்தினாலும் பரமத்தை அடைகிறார்கள்.

13/26 இறை தத்துவங்களை பெரியோர்களிடம் பெற்று கரைகண்டவர்கள் பிறவி எடுப்பதில்லை.

13/27 அசையும் பொருள் அசையா பொருள் உயிரினங்கள் அனைத்தும் எம் விசையால் விளைந்தவை.

13/28 அனைத்து சீவராசிகளிலும் இறைவனை இணைத்து பார்ப்பது சமத்துவ தத்துவம்.

13/29 "எங்கும் நிறைந்துள்ளான் இறைவன்" என்பவன் தன்னை தன்னால் முன்னேற்றிக் கொள்வான்.

13/30 தீ செயல்கள் யாவும் மனம், புலன்களால் செய்யப் படுகிறது நான் அச்செயல்களின் கர்த்தா அல்ல.

13/31. அண்டங்கள் அனைத்துக்கும் ஆதி மூலம் ஆண்டவனே என்பவன் ஆண்டவனை அடைகிறான்.

13/32 பரம் பொருள் தனது இயல்புபடி எல்லா உயிர் களிலும் இருந்தாலும் அதன் 'மனதில்' இருப்பதில்லை.

13/33 வானம் பூமியைத் தொடுவதில்லை. அதுபோல் ஞானம் மனதைத் தொடுவதில்லை.

13/34 ஆதவன் உலகை ஒளிமயமாக்குகிறான். ஆதன் (ஆத்மா) உடலை ஒளிமயமாக்குகிறான்.

13/35. இவ்விதம் உடலையும், அறிவையும், இயற்கையையும் உணர்ந்தவர்கள் பரமாத்மாவை அடைவர்.

# அதிகாரம் - 14

## குண வேறுபாடு [ குணத்ரய விபாக யோகம் ]

14/1. முனிவர்களும், மனிதர்களும் சித்தி பெற உதவிய சத்திய போதனை இது.

14/2. என் கீதையைப் பின் பற்றுபவர்களுக்குப் பிறப்பு இல்லை; பிரளய காலத்தில் துன்பமும் இல்லை.

14/3. துளி, வளி, ஒளி (அபரா) எனும் மூலக் கருவை பொருட்கள் மீது பொருத்தி உயிர்களை உருவாக்குகிறேன்.

14/4. பரமாத்மா எனும் என் அறிவு தாயாகவும், என் உடல் தந்தையாகவும் இருக்கிறது.

14/5. பிரகிருதி எனும் சத்துவம் ரசோ தமோ குணங்கள் அறிவை அடையாளம் காட்டுகின்றன.

14/6. சத்துவகுணம் : தெய்வீகமானது அது ஒளிமயமானது ஞான வைராக்கியத்தாள் அது வளர்கிறது.

14/7. இரசோ குணம் : பேராசையுடையது. அந்த ஆசைகளின் பயன்களை அனுபவிக்கிறது.

14/8. தமோ குணம் : அறியாமையையுடையது அது சோம்பல் தூக்கம் இவைகளை கொண்டது.

14/9. சத்துவம் தத்துவம் அறிகிறது; ரசோ அதை மறுக்கிறது; தமோ குணம் எதுவும் அறியாது.

14/10. இந்த மூன்று குணங்களும் ஒன்றை ஒன்று முந்துவதும் உண்டு பிந்துவதும் உண்டு.

14/11. உள்ளத்தில் நல்லதையே நினைக்கும் உறுதி எனும் ஒளியே சத்துவகுணம்.

14/12. தீராத பேராசையில் சிக்கித் தருமத்தை நினைவு கூராத நிலைப்பாடே இரசோ குணம்.

14/13. எந்த வேலையையும் ஈடுபாடு, கடப்பாடின்றி மந்த மதியாகச் செய்வதே தமோகுணம்.

14/14. சத்துவகுணத்து தத்துவவாதி மறுமையில் பெருமை மிக்க சுவர்க்கம் என்பதை அடைகிறான்.

14/15. இரசோ குணத்தார் நீசர்களிடம் பிறப்பார்கள், தமோ குணத்தார் பூச்சி புழுவாய் பிறப்பார்கள்.

14/16. சத்துவ குணம் : அமைதி தரும்! இரசோ துயரத்தை யும், தமோ அறியாமையையும் தரும்.

14/17. சத்துவத்தில் பேரின்பமும் இரசோ குணத்தில் சிற்றின்பமும், தமோகுணத்தில் துன்பமும் வரும்.

14/18. சத்துவம் சொர்க்கத்தை காட்டும்! இரசோ பிறவியில் வாட்டும்! தமோ நரகத்தைக் காட்டும்.

14/19 இந்த முக்குணங்களை கடந்தவன் இயற்கையைக் கடந்தவன் என்ற தத்துவத்தை அறிவாயாக.

14/20 பிறப்பு, போராட்டம், இறப்பு எனும் துன்பம் தரும் பிறவிக்குக் காரணமான குணங்களை விடு!

14/21 முக்குணம் விட்டவன் எப்படி இருப்பான்? அவன் எப்படி நடப்பான்? முக்குணம் விடுவது எப்படி?

14/22 முக்குணங்களின் செயல்களை செய்யும் போது விருப்பு வெறுப்புகள் இல்லாமல்...

14/23 குணங்களே குணங்களை இயக்குவதை அறிந்து அந்த என் குணத்தானை இறைஞ்சிடுக....

14/24 இன்பம், துன்பம் மண், பொன் வேண்டுதல், வேண்டாமை இகழ்ச்சி, புகழ்ச்சி இவைகளை...

14/25 பெருமை, சிறுமை நண்பர் பகைவர் நான் எனும் சிறுமையை கடந்தவர் முக்குணத்தை கடந்தவர்.

14/26 பக்தி வழியில் இந்த முக்குணத்தை கடந்தவன் முத்தொழில் புரியும் பரபிரம்மத்தை அடைகிறான்.

14/27 பிறவா வரம் பெறவும் அறம்வாழவும், ஆனந்தம் பிறக்கவும், அடிப்படையாய் இருப்பது யாம்!



# அதிகாரம் - 15

## புருசோத்தம விளக்கம் [ புருசோத்தம யோகம் ]

15/1. மேல் நோக்கிய வேர்களையும் கீழ் நோக்கிய கிளை களையும் வேதங்களை இலைகளாகவும் கொண்ட தலை கீழ் மரம் ஒன்று உள்ளது.

15/2. (முக்குணங்களால்), புலன்களால் துளிர்விட்டு பிறவிக்கிளைகளுடன், மும்மல வேறுடன் ஆனமரம்.

15/3. முக்காலமும் அழியாத 'பந்தம்' எனும் இம்மரத்தை 'பற்றின்மை' எனும் ஆயுதத்தால் வெட்டுக!

15/4. அதற்கு உதவியாக அந்த சச்சிதானந்தனைச் சரணடைந்து சதா சிந்திக்க வேண்டும்.

15/5. பற்று, செருக்கு, ஆசை, இருமை உணர்ச்சி களை வென்றவர்கள் பக்குவமடைந்த ஞானிகள்.

15/6. பக்குவஞானி பாச வலையில் விழார், அது கதிரவன் நிலா விண்மீன்களைவிட ஒளி மயமானது.

15/7. பரமாத்மா போன்றதே சீவாத்மாவும்; புலனின்பத்தை விட்டால் பரமாத்மா ஆகலாம்.

15/8. மணமதை காற்று சுமந்து செல்லவது போல் மனதை பிறவி சுமந்து செல்கிறது.

15/9. புலனின்பம் என்பது புலன்களின் மூலம் வருவது அறிவு என்பதுவும் புலன்களின் மூலம் வருவதே!

15/10. சிற்றின்பம், பேரின்பம் வேறுபாடு மனிதனுக்கு தெரியாது பேரறிவாளருக்கே அது தெரியும்.

15/11. சிந்திக்கத் தெரிந்த அவர்களுக்கு புரியும், சிந்திக்கத் தெரியாதவர்களுக்கு அது புரியாது.

15/12. கதிரவனையும் தீயையும் எரியச் செய்வது எரிக்காற்றின் அணுக்களாகிய யாம் தான்.

15/13. வாயு அணுக்களாகி தாவரங்களையும் கோள்களையும் விலங்குகளையும் படைக்கிறோம்.

15/14. எரிக்காற்று, கரிக்காற்று ஆக உயிர்களில் இயங்கி ஒவ்வொரு செல்லுக்கும் நீர், காற்று, வெப்பம் மருந்துகளைத் தருகிறேன்.

15/15. இதயத்தை இயக்குகிறேன், அந்த இயக்கத்தால் நினைவு, அறிவு தெளிவு ஏற்படுகிறது.

15/16. அழிவது இகழ் உடம்பு, அழியாதது புகழ் உடம்பு இப்படி இரு வகை உண்டு.

15/17. இருவகையிலும் யாம் வேறுபட்டவன் மூவுலகத்திலும் ஆட்சி செய்யும் உடம்பற்றவன்.

15/18. அழியாதது, அழிய முடியாதது என்பதால் வேதங்கள் எம்மை பரம்பொருள் என்கிறது.

15/19. இவைகளை அறிந்த ஞானி எல்லாம் அறிந்தவன் எல்லாக் காலமும் எம்மையே தொழுபவன்.

15/20 மறைவாகப் பேச வேண்டியதை இந்த 'மறையை' முறையாக தந்து விட்டேன். நீ யோசி!.



# அதிகாரம் - 16

## தேவ அசுர இயல்புகள் விளக்கம்

## [ தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம் ]

16/1. ஐயமின்றி தத்துவம், தியானம், தேவதை, பகவான், குரு வணக்கம் வேதமறிதல், தர்மம், நேர்மை.

16/2. தீங்கிழையாமை, வாய்மை, உண்மை, மெய்மை, அடக்கம், அமைதி, குறை பழி கூறாமை, பரிவு, அறம் பிழையாமை, வீண் செயல்.

16/3. சாந்தம், பொறுமை, உறுதி, புறத்தூய்மை, சமாதானம் தாழ்மை இவை தேவ பண்புகள்.

16/4. படாடோபம், இறுமாப்பு, தற்பெருமை, கோபதாபம், கடுமை இவை அசுரப் பண்புகள்.

16/5. தேவகுணம் இந்திர லோகத்தைத் தரும், அசுரகுணம் கந்தர கோலத்தைத் தரும்.

16/6. தேவகுணம், அசுரகுணம் என சமுதாயம் இரு வகைப்படும் அசுரகுணம் உடையவர்கள்.

16/7. தகாதவை எது தக்கவை எது என்றறியார், அகத் தூய்மை, புறத்தூய்மை, ஒழுக்கமும் இருப்பதில்லை.

16/8. காதலுக்காகவும் காசு பணத்திற்காகவுமே இந்த உலகம் என்பார்கள், அதில் உறுதியாக இருப்பர்.

16/9. தவறான இக்கருத்துக்களைக் கொண்ட அசுர குணத்தவர்களால் சீரழிவு செழிக்கிறது.

16/10. ஆடம்பரம், தற்பெருமை, அடாவடித்னமாக ஆசைக்கு அளவு இல்லாமல் நாசத்தில் ஈடுபடுவர்.

16/11. ஆசைக்கு அளவு வைத்து, கவலைகளை விடுத்து வாழத்தெரியாமல் பேராசைப் பேயால் நாசமாவர்.

16/12. ஆசை, பாசக்கயிறுகளால் கட்டுப்பட்டவர்கள் காமகுரோதங்களால் நீதியை மதிப்பதில்லை.

16/13. நான் பெற்றவை, நான், அடைவேன், நான் சம்பாதித்தது என்று நான் என்று எண்ணுவார்கள்.

16/14. பகைவனை அழித்தேன், மற்றவர்களையும் அழிப்பேன்! சர்வ வல்லமை பெற்றவன் என்றும்.

16/15. நான் மிகப்பெரியவன் வேள்வி, தானம் செய்யப் போகிறேன் புகழில் மகிழப்போகிறேன் என்று.

16/16. மோக வலை மீனாக பாழ் கடலில் வீழ்கின்றவர்தான் அசுரகுணமுடையவர்கள்.

16/17. உயர்வு மனப்பான்மை, செல்வச் செருக்குடைய வர்கள் யாக பூசைகள் எடுபடுவதில்லை.

16/18. ஆணவம், வலிமை, கர்வம், ஆசை, கோபமுடையவர் உன்னை மட்டுமல்ல என்னையும் மதிப்பதில்லை.

16/19. எம்மை மதியாதவர்கள், தீமையை மிதியாதவர்கள், கொடியவர்கள், கடையவர்கள்.

16/20. பலப் பிறவிகளிலும் எம்மைச் சேராமல், பல நரகங்களில் மாறிமாறிச் சேருகிறார்கள்.

16/21. காம, கோப, லோபம் உள்ளத்தை அள்ளும் வாயில்கள்! உள்ளே போனால் பள்ளத்தில் விழ வேண்டும்!

16/22. காம, கோப, லோபக் கவர்ச்சிக் கோட்டைக்குள் போகாதவன் மோட்சக் கோட்டைக்குள் போவான்.

16/23. நீதியை மதிக்காமல் நினைத்தபடி நடப்பவன் வெற்றி பெறாமல் வேதனையடைவான்.

16/24. நீதி நெறிமுறைகளை அறிந்து, தாழ்மையுடன் தர்மநெறிகளில் தர்ம காரியங்கள் செய்க.

# அதிகாரம் - 17

## முக்குணங்களின் முக்கிய விளக்கம்

## [ ஸிரத்தாத்ரய விபாக யோகம் ]

17/1. ஆகம விதியை மீறி ஆன்மீகம் செய்பவர்கள் முக்குணங்களில் எக்குணத்தைச் சேர்ந்தவர்கள்.

17/2. ஆகம விதியை மீறி ஆன்மீகம் செய்பவர்கள் முக்குணங்களில் மூன்று விதமாக இருக்கிறார்கள்.

17/3. இறையை நம்புவது மனதைப் பொறுத்தது, மறையை நம்புவது அவன் குணத்தைப் பொறுத்தது.

17/4. சத்துவ குணம் கடவுளையும், இரசோ குணம் சிறு தெய்வத்தையும், தமோகுணம் ஆவிகளையும் வழிபடும்.

17/5. ஆகம விதியை மதிக்காமல் அகந்தை ஆசாபாசம் முரட்டுத்தனம் கொண்டவர்கள் உள்ளனர்.

17/6. சீவாத்மாவையும் பரமாத்மாவையும் துன்புறுத்து பவர் யாரோ அவர்கள் இழி குணத்தவர்.

17/7. ஒவ்வொருவருடைய குணங்களுக்கு ஏற்றவாறே உணவு, வேள்வி, வழிபாடு தானம் வேறுபடுகிறது.

17/8. அறிவு பலம், உடல் பலம், ஆன்ம பலம் உடைய உணவுகளை உண்பது சத்துவ குணம்.

17/9. இரசோ குணத்தவர்கள்: கசப்பு, புளிப்பு, உவர்ப்பு, காரம் போன்ற நோய் நொடி தரும் உணவை உண்பர்.

17/10. தமோ குணத்தவர்: பழைய சுவையற்ற ஆரிப்போன, ஊசிப்போன, எச்சல் உணவையே உண்பர்.

17/11. சத்துவ குணத்தவர்கள்: உலக நன்மைக்காக ஆகம விதிகளின்படி வேள்வி செய்வார்கள்.

17/12. இரசோ குணத்தவர்கள் : பொன் பொருள் வேண்டி அல்லது வருவாய்க்காக யாகங்கள் செய்வார்கள்.!

17/13. தமோ குணத்தவர்கள்; விதிகளை மீறி பிரசாதம், மந்திரம், தட்சணையில்லாமல் வேள்வி செய்வார்கள்.

17/14. **உடல் வழிபாடு;** இறைவன், அறவோர், அந்தணர் களை வணங்குவதும் மகாத்மா போல் வாழ்வதும்.

17/15. **மொழி வழிபாடு:** பிறர் நோகாமல், கனிவுடனும், நலமுடனும் மெய்யுடனும் பேசுவதும், ஓதுவதும்.

17/16. **மன வழிபாடு :** தெளிவு, அமைதி, மௌனம், அடக்கம், தூய்மை இவை மனதால் ஆன வழிபாடு.

17/17. இப்படி உடல், மொழி, மனம், இவைகளால் செய்யப்படும் வழிபாடு சத்துவ குணமாகும்.

17/18. புகழுக்கும் பெருமைக்கும் பொருளுக்கும், செருக்குக்கும் செய்யும் வேள்வி இரசோகுணமாகும்.

17/19. பிற ஆத்மாக்களுக்கு தீங்கு செய்ய முரட்டுத் தனமாக செய்யப்படும் வேள்வி தமோ குணம்.

17/20. சத்துவ குணம் : தகுதியானவருக்கு தக்க நேரத்தில் தக்க இடத்தில் பலன் பாராமல் தானம் செய்வது.

17/21. கோபத்துடன், கை மாறு கருதி செய்யப்படும் தானம் இரசோ குணமாகும்.

17/22. தமோகுணம் : தகுதியற்றவர்களுக்கு தகாத இடத்தில் தகாத காலத்தில் செலவு செய்யும் தானமாகும்.

17/23. 'ஓம் தத் ஸத்' என்பது பிரமத்தைப் போற்றும் மந்திரம்! இதையாகம் செய்கையில் ஓதுவர்.

17/24. வேத வாணர்கள் வேதங்களில் சொல்லப்பட்டபடி தான தவ வேள்விகளை 'ஓம்' என்றே துவங்குவர்.

17/25. 'எல்லாம் இறைவனுக்கே' என்ற பொருள்படும் 'தத்' என்று ஓதியே நற்காரியங்களை நடத்துவர்.

17/26. 'சத்தியமாக' என்ற பொருள்படும் 'ஸத்' என்று ஓதியே நற்காரியங்களை நடத்துவார்கள்.

17/27. சத்தியமாக என்ற பெருள் படியும் 'ஸத்' எனும் சொல் நல்ல செயல்களுக்கும் சொல்லப்படும்.

17/28. அக்கரையில்லாமல் செய்யும் வேள்வி, தானம் வழிபாடு எக்கரையும் சேராதது அது 'அஸ்த்' என்பதாகும்.

# அதிகாரம் - 18

## துறவறத்தின் விளக்கம்
## [ மோச்சம் சந்நியாச யோகம் ]

18/1. என்னைக் கவர்ந்த கண்ணா! துறவு தியாகம் இவைகளை விளக்குவீராக?

18/2. "சிலர் பொருள் தேடாததை 'துறவு' என்பர், சிலர் பெற்ற பொருளை துறத்தலே 'துறவு' என்பார்கள்.

18/3. சிலர், நன்மை தீமை தரும் உலகியல்பற்றை விட வேண்டும் என்பர், சிலர் அதை மறுப்பார்கள்.

18/4. என் கருத்தோ முதலில் 'தியாகம்' என்பது பற்றியது இதுவும் முக்குண பரிமானம் கொண்டது.

18/5. வேள்வி, தானம், தவம், துறக்கத்தக்கதல்ல, அவை கல்வி கேள்விகளை வளர்க்கத்தக்கது.

18/6. அறம் எனப்பட்டதே வேள்வி, தானம், தவம் அதுவும் பற்று பயன் பாராமல் செய்யப்பட வேண்டும்.

18/7. விதிக்கப்பட்ட நற்செயல்களை செய்யாமல் விடுதல் 'அசுரதியாகம்' என்று சொல்லப்படுகிறது.

18/8. செய்ய வேண்டிய நற்செயல்களை மெய் வருத்தம் பார்த்து செய்யாததை தமோ குணம் என்பர்.

18/9. கட்டாயம் செய்தே தீர வேண்டும் என்ற கடமைகளை பயன் கருதாமல் செய்வதே சத்துவ குணம் என்பர்.

18/10. நற்செயல்கள் தீச்செயல்களின் உண்மைகளை அறிவதே சத்துவ குணம் என்பர்.

18/11. மனிதனால் விட முடியாத பாவ புண்ணியத்தையும் இறைவனுக்கே தருபவன் மகா தியாகி.

18/12. இருவினைப் பயன்களை இறைவனுக்கே அர்ப்பணம் செய்தவர்களுக்கு ஆபத்து இல்லை.

18/13. செயல்களில் வெற்றிவாகை சூட ஐந்து கடன்கள் சாங்கிய வேதாந்தப்படி கூறப்பட்டுள்ளது.

18/14. பலம், அறிவு, புலன்கள், திட்டமிடல், கடவுள் அருள் ஆகிய ஐந்தும் வெற்றியைத் தேடித்தரும்.

18/15. மனம் வாக்கு காயங்களால் செய்யப்படும் செயல்கள் இந்த ஐந்தின் தீர்மானப்படி நடைபெறுகிறது.

18/16. இந்த ஐந்தின் துணையில்லாமல் அனைத்தும் நான் செய்து முடிப்பேன் என்பது அறிவீனம்.

18/17. அகந்தையில்லாதவன் ஆசாபாசமில்லாதவன், அவன் கொலைக் குற்றத்தில் மாட்ட மாட்டான்.

18/18. செயலைத் தூண்டுவது : அறிவு அறிஞன் அறிபொருள்! செயலாக்கம் பெறுவது: புலன், செயல், செய்பவன்!

18/19. முக்குணப்படி அறிவு, செயல், செயல் படுபொருள் ஆகிய மூன்றும் அமையும் என்பதை அறிக.!

18/20. எண்ணற்ற உருவங்கள் இருந்தாலும் 'உயிர் ஒன்றே' அது சீவாத்மா என்றே எண்ணுவது சத்துவம்!

18/21. உருவங்கள் வேறுபட்டாலும் 'உயிர் ஒன்றே' என்பதை ஏற்றுக் கொள்ளாதது இரசோ குணம்.

18/22. பகுத்தறிவு இல்லாமல் பார்த்ததையே பேசுபவன் தன்னறிவு பெறாத தமோ குணத்தவன்.

18/23. நலன், பலன், பாராமல் செயல்படும் செயல் வீரன் சத்தியமாக அவன் சத்துவ குணத்தவன்.

18/24. நலன், பலன், பார்த்துச் செயல்படும், செயல் நல்லதல்ல அது இரசோ குணம்.

18/25. மற்றவர்களின் துன்பம் துயரம் பற்றியகவலை அற்றவர்களோ தமோ குணத்தவர்கள்.

18/26. வெற்றி தோல்வி வீரர்களுக்கழகு என்று சத்தியத்திற்கு போராடுபவன் சத்துவ குணத்தவன்.

18/27. பயன்கருதியும், பேராசை கொண்டும் துன்ப துயரங்களில் மாட்டுபவன் இரசோ குணத்தவன்.

18/28. அடங்காதவன், அறிவிலி, ஏமாற்றல், சோம்பல் மடங்காதவன், மந்தன் இவை தமோ குணம்.

18/29 இங்ஙனம் முக்குணங்களால் ஏற்படும் பற்பல புத்திகளைத் தெரிந்து கொள்.

18/30 செய்வது செய்யக் கூடாதது, பயப்படுவது பயப் படாதது பற்றுவது, பற்றுவிடுவது அறிவது சத்துவகுணம்.

18/31 தர்மம், அதர்மம் பற்றியோ நல்லது கெட்டது பற்றியோ இரசோ குணத்திற்குத் தெரியாது.

18/32 நீதியிலும் தர்ம பாதையிலும் போகாமல் தீய பாதையில் செல்வதே தமோ குணம்.

18/33 பயிற்சியால் பலப்பட்டு, பாதுகாக்கப்பட்டு, எந்த முயற்சியாலும் உடைக்க முடியாத உள்ளம் சத்துவம்.

18/34 அறம், பொருள், இன்பம் எனும் இல்லறப் பற்றுகளை உடையது இரசோ குணம்.

18/35 கனவுகள், பயம், கவலை, வருத்தம், மயக்கம் இவைகளை விடத்தெரியாததே தமோ குணம்.

18/36 மூன்று குணங்களால் சுகம் காணும் சீவராசிகள், அந்த குணங்கள் தரும் துன்பத்தையும் கேள்!

18/37 ஆன்ம சக்தி பெறுவதில் முதலில் கசப்பாக இருக்கும் பிறகு இனிப்பாக மாறும் சத்துவ குணத்தினருக்கு.

18/38 புலனின்பமோ முதலில் இன்பமாக இருக்கும் இறுதியில் துன்பமாக இருக்கும் இது இரசோகுணம்.

18/39 சுகம் எது? துக்கம் எது என்று பகுத்தறியாத அகமுடையவர்கள் தமோ குணமுடையவர்கள்.

18/40 முக்குணங்களில் இருந்து விடுபடுபவர்கள் விண்ணிலும் மண்ணிலும் வேறு உலகிலுமில்லை.

18/41 குணங்களால் பிராமணர் சத்திரியர் வைசியர் சூத்திரர் (அந்தணன், அரசன், முதலாளி, தொழிலாளி)

18/42 அந்தணர் குணம்: அமைதி, ஒதுங்கிப் போதல், தவம் தூய்மை சமாதானம், நேர்மை, அறிவு பரலோக நம்பிக்கையுடையவர்கள்.

18/43 சத்திரிய குணம் : வீரம், உடற்கட்டு, மன உறுதி, திறமை, பின் வாங்காமை, கொடை, ஆளுமை.

18/44. வைசியர்குணம் : உழவு, வணிகம், ஆடுமாடு வளர்த்தல். சூத்திரர்குணம் : உடல் உழைப்பு, பணிவிடை செய்தல்.

18/45 தன் குலத் தொழில்களை மாற்றிச் செய்வதால் மேல் நிலை வளர்ச்சி பெறுவதில் தவறில்லை.

18/46 இந்த நான்கு தொழில்களையும் நன்கு செய்பவர்கள் என் அங்கத்தில் ஒருவர் ஆவார்கள்.

18/47 தன் நிலையில் முன்னிலை வகிக்க மேல் நிலைத் தொழிலைச் செய்ய மேம்படுவது மேன்மை தரும்.

18/48 புனிதமான தீயையும் புகை சூழ்வது போல் தன் புனிதமான தொழிலில் பகை சூழும். பயப்படாதே.

18/49. தன்னை வென்ற சாங்கிய பயிற்சியாளன். விண்ணை வென்ற வணாகிறான். (ஆதனை அறிதல்)

18/50. ஞானத்தின் மிக உயர்ந்த பிரம்ம நிலையை மோனத்தால் மனிதன் எப்படி அடைகிறான்?

18/51. அறிவியல் தெளிவு மனதில் தெளிவு பெற்று உடலில் தெளிவு எண்ண தெளிவு பெற்று.

18/52. தனித்திருந்து, பசித்திருந்து, விழித்திருந்து இறையை நினைத்திருந்து ஆழ்ந்திருந்து...

18/53. காம, கோப, குரோத, பொருளாசையை விட்டு கடையனாக தன்னைக் கருத வேண்டும்.

18/54. துன்பம், இன்பம் போன்றவைகளை சமத்துவமாக கருதும் குணத்தவனே மகத்தானவன்.

18/55. பரம பக்தியால் எவன் எம்மை அறிகிறானோ அவனே எம் தேசத்திற்குள் வருகிறான்.

18/56. எத்தொழிலை செய்தாலும் இழிவில்லை இறையடி யார்கள் நித்திய இடத்தை நிச்சயம் பெறுவார்!

18/57. எண்ணிய செயல்கள் கண்ணனுக்கே! புண்ணியம் யாவும் கண்ணனுக்கே! தன்னையே தந்திடு கண்ணனுக்கே!

18/58. உன்னை அறிந்து கொள்! அதற்கு முன் என்னை அறிந்து கொள்! கண்ணன் ஆக்கவும் செய்வான் அழிக்கவும் செய்வான்!

18/59 போர் செய்வதே உனக்கு சிங்காரம்! பொய்யாக நடிப்பது அகங்காரம்!

18/60 கண்ணனின் பாதையில் சென்றிடு! மயக்கத்தை மாய்த்திடு! கடமை செய்யப்புறப்படு!

18/61. உடல் எனும் இயந்திரத்தில் உயிர்களை அமர்த்தி ஓட விடுபவன் கண்ணன்.

18/62 கண்ணன் காட்டுகின்ற பாதை அமைதி, ஆனந்தம் அனைத்தையும் அடையும் பாதை.

18/63 மறை பொருளை அருளியுள்ளேன்! உன் அறிவு படி, எப்படியோ? அப்படிச் செய்!

18/64 என் நண்பனே மீண்டும் எச்சரிக்கிறேன் மறை பொருளுக்கெல்லாம் இது மறை பொருள்!

18/65 என் மீது காதலாகி கசிந்துருகி கன நேரமும் மறவாதிருப்பாய்! யானும் மறவாதிருப்பேன்!

18/66 உன் பாவங்களை மன்னிப்பேன்! உன் தான தர்மங்களுடன் எம்மை சரணடைந்து விடு.

18/67 இந்த என் அறிவுரைகளை, பக்தி, விருப்பம் இல்லாதவர்கள் படிக்கவே வேண்டாம்.

18/68 இந்த என் மந்திரங்களை பந்தமுடன் படித்து மாந்தர் களுக்கு போதிப்பவன் எனக்கு சொந்தமாவான்.

18/69 அந்த என் சொந்தக்காரனைப் போல் எனக்கு வேறு ஒரு பந்தம் உலகில் இல்லை.

18/70. எந்த மனிதன் இந்த வேதங்களை நன்கு கற்பவனோ அந்த மனிதன் எமக்கு வேள்விகள் நோற்பவன்

18/71. கற்பிப்பவனும் கற்பவனும் அதை கேட்பவனும் சுவற்கவனம் சென்று சுகம் பெறுவர்.

18/72. இந்த வேதத்துடன் மனம் இசைந்து தாகத்துடன் இதை கேட்டாயா? மோகத்தை விட்டாயா?

18/73. "கண்ணா! மன்னன் தூங்கி விட்டால் புண்ணியம் அழிந்துவிடும்" என்று ஞானம் பெற்று விட்டேன்! துணையிருப்பாய் கண்ணா துவக்குகிறேன் போர்!

18/74. சஞ்ஜையன் "கண்ணனும் காண்டீபனும் உரையாடிய புண்ணிய உரையைப் புல்லரிக்கக் கேட்டேன்.

18/75. தொலைக்காட்சியை வியாசர் அருளியதால் போர்க் களக்காட்சியை, புல்லரிக்கும் பேச்சைக் கேட்டேன்.

18/76. பரந்தாமனும் பார்த்திபனும் கலந்துரையாடியதை நினைத்து மீண்டும் மீண்டும் உருகுகிறேன்.

18/77. நினைத்து நினைத்து, வியந்து வியந்து, கண்டு கண்டு மகிழ்கிறேன் அந்தக் கண்ணனை!

18/78. பார்த்தனும் பகவானும் இருக்குமிடத்தில் அறமும் மறமும், திருவும், செயமும் இருப்பது உறுதி! உறுதி!

**நிறைவு பெறுக!**

**ஓம் தத் சத்**

**எல்லாமும் இறைவனுக்கே!**

# சொற்பொருள்

| | | |
|---|---|---|
| ஆதன் | = | ஆன்மா, ஆத்மா, உயிரணு, ஆதி |
| சுவனம் | = | சுவர்க்கம் |
| புவனம் | = | பூமி, நாடு |
| சமநிலை | = | ஒருமை மனம், சம தருமம் |
| ஏகத்தவம் | = | ஒரே கடவுள் எனும் கொள்கை |
| சத் | = | தோற்றம், மறைவு, வளர்சிதை மாற்றங்கள், உண்மை |
| தத் | = | தத்துக்கொடுத்தல், இறைவன். |
| அசத் | = | சத் சொல்லுக்கு எதிர்மறையானது. |
| முக்குணம் | = | சத்துவம் இரசோ, தமோ |
| யோகம் | = | பயிற்சி செயல், விளக்கம் (இடம் அறிந்து பொருள் கொள்க) கடமை. |
| கர்ம யோகம் | = | பக்தி மார்க்கம், கடன் பணி, இல்லறம் |
| ஞானயோகம் | = | மனிதர்களின் அறிவு பயிற்சி விளக்கம் |
| பக்தி யோகம் | = | அடியார்கள்பற்றிய விளக்கம் |
| மும்மலம் | = | ஆணவம் மாயை, கன்மம் |
| புலன்கள் | = | மெய் வாய், கண், மூக்கு, செவி |
| மார்க்கம் | = | வழி, பாதை, வழிபாடு, |
| சகுணம் | = | உருவம் |
| சாங்கிய யோகம் | = | ஆதனை அறிதல் |
| ஆத்மா | = | (ஆதன்) உயிர்களின் அறிவு |

| | | |
|---|---|---|
| ஞானம் | = | உயர், அறிவு (உயர்திணை) |
| சீவாத்மா | = | உயிர்களின் அறிவு (அஃறிணை) |
| பரமாத்மா | = | பிரபஞ்ச அறிவு |
| ஆதன் - ஆதம் | = | ஆத்மாவின் தமிழ்ச் சொல் |
| யோகி | = | துறவி, பயிற்சியாளன், பக்தன் |
| ஞானி | = | அதீத அறிவு |
| ரிஷி | = | தபசி |
| சித்தர் | = | அற்புதர், அற்புதம் செய்பவர், பேரறிஞர், சித்தத்தை நிறுத்துபவர். |
| முனி | = | கடவுள் சிந்தனையிலேயே இருப்பவர். சித்தத்தை நிறுத்துபவர் இருப்பவர். |
| சந்நியாசி | = | துறவி, புலனடக்கி |
| சங்கல்பம் | = | மன ஒருமை செய்தல், |
| யக்ஞம் | = | வழிமுறை |
| அதியக்சன் அவ்யக்தன் | = | உருவமற்றவன் |
| மும்மூர்த்தி | = | பரமம், பெரமம், பிர்மம் ஆகுதி, தீயின் மூலம், இறைவனுக்கு அனுப்புவது. |









## நன்றி!

எழுது கோலும் தந்து,
இருக்கையும் தந்து,
எழுதுவதற்கு ஊக்கமும் தந்து,
புத்தகச் செலவுகளையும் தந்து,
ஊக்குவித்த இறையன்பர்
**திரு. எம். இராமதாஸ்**
(பி.ஆர்.எஸ். மேல் நிலைப்பிள்ளி தாளாளர்)
அவர்களுக்கும்
அன்றில் பதிப்பகத்திற்கும்
கவிஞன் குரல் பதிப்பகத்திற்கும்
கண்ணதாசன் கலை இலக்கிய மன்றம்
விழுதுகள் நிறுவனத் தோழர்களுக்கும்
U & A கிராபிக்ஸ் தோழர் சிவாவிற்கும்
நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.



இங்ஙனம்
**விழுதுகள் செ. அய்யாப்பிள்ளை**
9444775530